egistered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 32—No. 2



# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 32 | விளம்பி மாசி 1959 பிப்ரவரி | இதழ் 2

உள்ளுறை — பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3

தனிப்பிரதி அணா 4

## சமாஜ நிர்வாக சபைக் கூட்டம்

**11-1-59** ஞாயிறன்று ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் காலை 9-30 மணிக்கு நடைபெற்றது.

**15-2-59** ஞாயிறன்று இராயப்பேட்டை ஸ்ரீ பால சுப்பிரமணிய பக்தஜன சபையில், காலை 9-30 மணிக்கு நடைபெறும்.

---

## செய்திச் சுருக்கம்

பிரிவாற்றுமை :

சித்தாந்தச் செல்வர் செந்தமிழ் இரத்தினாகரம் மருத்துவமணி உயர்திரு **வல்லை-சண்முகசுந்தர முதலியார்** அவர்களின் வாழ்க்கைத் துணைவியாரும், சைவப் பெரியார் **திரு. பூ. சமரபுரி முதலியார்** அவர்களின் அரும் பெறல் மாமியாரும், சென்னை அரசாங்கத்தின் முன்னாள் மொழிபெயர்ப்புத் துறைத் தலைவரும், தமிழ்மொழி பெயர்ப்பாளரும், நூற்பதிப்பாளரும், சென்னை மாணவர் மன்றத் துணைத்தலைவருமான திரு. **வல்லை-பாலசுப்பிரமணிய முதலியார்**, B. A. அவர்களின் ஆருயிர் அன்னையாரும் ஆகிய **திரு. சிவபாக்கியம் அம்மையார்** அவர்கள் ஐந்து தலைமுறைகள் கண்டு அளப்பருஞ் சிறப்புடன் வாழ்ந்திருந்து, தமது 89-ஆம் அகவையில் இவ்வுலக வாழ்வு நீத்தமை அறிந்து பெரிதும் வருந்துகின்றோம். அம்மையார் அவர்களின் ஆருயிர் அம்பலவாணரின் திருவடிக்கீழ் அமைதியின்பம் எய்துவதாக!

**முத்தமிழ் அச்சக இடமாற்று விழா** :—காஞ்சிபுரம், நெல்லுக்காரத்தெரு, 27-ம் எண் கட்டிடத்தில் இதுகாறும் நடைபெற்று வந்த முத்தமிழ் அச்சகம், காஞ்சிபுரம் எண்ணெய்க்காரத் தெரு, 14-ம் எண்ணுள்ள கட்டிடத்திற்கு இடமாற்றப் பெற்றமை குறித்து, 25-1-59 காலையில் சென்னை அரசின் ஆட்சிமொழித் தனி அலுவலர் திரு. கீ. இராமலிங்கனார், M.A. அவர்கள் தலைமையில் விழா ஒன்று சிறப்புற நடைபெற்றது. விழாவின்கண் திரு. ந. சஞ்சீவி, M.A. அவர்கள் வரவேற்புரை கூறினார். முனைவர்-திரு. மு. வரதராசனார், M.A., M.O.L., Ph.D. அவர்கள் இயற்றமிழின் இனிமை பற்றியும், அச்செல்வத்தினைக் காக்கவேண்டுவதன் இன்றியமையாமை பற்றியும் சொற்பொழிவாற்றினார். தமிழ் இசை ஆராய்ச்சி அறிஞர் குடந்தை. பி. சுந்தரேசன் அவர்கள் இசைத் தமிழின் மாண்பினைத் திருமுறை

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாரியை உள்நாடு

மலர் 32 | விளம்பி மாசி 1959 பிப்ரவரி | இதழ் 2

## சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜம்
## 53–ஆம் ஆண்டுவிழா மாநாட்டுத்
# தலைமையுரை*

திருச்சிற்றம்பலம்

கல்லால் நிழல் மலை(வு) - இல்லார் அருளிய
பொல்லார் இணைமலர் - நல்லார் புனைவரே.

திருச்சிற்றம்பலம்

சிவநேயச் செல்வர்களே ! செல்வியர்களே !

கருத்திற் பரவும் மெய் வேடத்தின் தோற்றமாய் நம் முன்பு எழுந்தருளியிருந்து நமக்கெல்லாம் உள்ளுணர்ச்சியைத் தந்தருளும் (மயிலம், பொம்மபுரம் ஆதீனகருத்தர்) ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்கள் திருவடிகளுக்கு முதற்கண் அடியேனது பெருவந்தனையைச் செலுத்துகின்றேன். மற்றும்! உங்கள் அனைவர்க்கும் அடியேனது அன்பு கனிந்த வணக்கம்.

நமது சைவ சித்தாந்த மகா சமாஜம் சென்ற ஐம்பத்து மூன்று ஆண்டுகளாக நம் தமிழகத்தே நிலவிச் செந்தமிழ்

*சித்தாந்த சிகாமணி - உயர்திரு. க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ.,எல்.டி. அவர்கள், 27-12-58 மயிலத்தில் நிகழ்த்தியது.

வளர்ச்சிக்கும், அதன் பயனாகவுள்ள திருநெறி எனப்படும் சிவநெறி விளக்கத்திற்கும் அரும்பெரும் பணிகள் பல ஆற்றி வந்துள்ளது. அப் பணிகளை உறுதுணையாக இருந்து செய்தோரும், செய்துவருவோரும் ஆகிய மெய்யன்பர்களுக்கு நம் கடப்பாட்டு உணர்ச்சியை நினைவுகூர்ந்து, என் சார்பிலும் உங்கள் சார்பிலும் வணக்கம் செலுத்துகின்றேன்.

மகா சமாஜத்தின் ஆண்டு நிறைவு விழாக்களில் கல்வி, அறிவு, ஒழுக்கம், இறைபணி என்றின்னவற்றில் சிறந்து விளங்கிய பல பெருமக்கள் தலைமையிடங்கொண்டு, அரிய ஆராய்ச்சியுரைகளையும், அறிவுரைகளையும் வழங்கி வந்திருக்கின்றார்கள். அப் பெருமக்களுள் குறிப்பாக யான் உளங்கொண்டு இப்போது நினைப்பது திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகளை. அந்த வரிசையில், அடியேனையும் ஒரு பொருளாக நினைத்து, மகா சமாஜத்தின் ஆட்சிக் குழுவினர் இவ்விழாவிற்குத் தலைமை தாங்கி நடத்தும்படி ஆணையிட்டுள்ளார்கள். கொடுத்துள்ள தானத்தின் உயர்வையும் அடியேனது சிறுமையினையும் உணர்வேன். ஆயினும், "என்னை நினைந்தடிமை கொண்டென்னிடர் கெடுத்துத் - தன்னை நினையத் தருகின்றான்" என்றபடி, அடியேனை ஆட்சிக் குழுவினர்க்கு நினைப்பித்தது திருவருளே யாதல் வேண்டும்; ஆதலால், அத் திருவருள் வலிகொண்டும், உங்கள் அன்பின் வலி கொண்டும் என் கடமையை ஒல்லும்வகை செய்யலுறுகின்றேன். என்னை இப் பணியில் ஈடுபடுத்தி உடனிருந்து உபகரிக்கும் ஆட்சிக் குழுவினர்க்கும், முன்னின்று அருள் சுரக்கும் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்களுக்கும் நன்றியறிதலாகிய வணக்கத்தை மீண்டும் செலுத்துகின்றேன்.

### சமயவுணர்வின் இன்றியமையாமை

இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகிய இக்காலம் யாவர்க்கும் கிளர்ச்சிதரும் காலம். விஞ்ஞானிகள் வானப் பெருவெளியில் நாட்டஞ் செலுத்தியுள்ள காலம். உலகில் உள்ளார் அனைவரும் அமைதி உடனுறைவை (சமாதான சக வாழ்வு—Peaceful Co-existence) விழையும் காலம். ஆனால் அமைதியின் தோற்றம் நேற்று உண்டு, இன்று

இல்லை எனும்படி நாள்தோறும் மாறிமாறி எண்ணுமாறு செய்திகள் வந்துகொண்டே இருக்கின்றன. நம் நாட்டில் மாணவர்களிடையுள்ள கட்டுப்பாடின்மையை எல்லோரும் நன்கு அறிவோம். இப்பதட்ட நிலைக்குக் காரணம் வாழ்க்கையின் உயர்ந்த குறிக்கோள்களையும் பயன்களையும் மக்கள் படிப்படியாக மறந்து வந்து விட்டதுதான் என்று இப்போது அறிஞர்கள் உணர்கிறார்கள்; எடுத்தும் உரைக்கின்றார்கள்.

தனிப்பட்ட மனிதன் தனது மனநிறைவை சமுதாய ஒற்றுமை, உயர்ந்த குறிக்கோள், வாழ்க்கையில் ஏற்படும் நலந்தீங்குகளில் சமநிலையுணர்வு, உண்மை, நட்பு, உழைப்பு முதலிய மக்கட்பண்புகளைக் கடவுள் உண்மைக்கொள்கையோடு கூடிய சமய வாழ்வு ஒன்றால்தான் பெறலாகும். இதனை உணர்ந்தே நம் முன்னோர்கள் கடவுள் வழிபாடில்லாத கல்வியறிவை அறிவென்றே கருதவில்லை. 'உலகியல் கூறிப் பொருளிது' என்ற திருவள்ளுவர்,

"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

என்றமை ஆழ்ந்து சிந்தித்தற்கு உரியது.

மக்களுடைய உணர்ச்சி, பிறந்த இடம், மொழி, தேயம் என்னும் வரம்புகளைக் கடந்து, ஒவ்வொருவரும் தம்மை உலக மக்களாகக் கருதவேண்டும் என்று இஞ்ஞான்று பலர் அறிவுறுத்துகின்றனர். ஆனால் 1800 ஆண்டுகளுக்குமுன் பிற நாடுகளில் வாழ்ந்த மக்கள் உணர்ச்சி அவர்தம் குழு உணர்ச்சியினும் மேம்பட்டு விரிவடையாதிருந்த காலத்தில், ஒரு தமிழ்ச்சான்றோர்

"யாதும் ஊரே, யாவரும் கேளிர்;
தீதும் நன்றும் பிறர்தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன;
சாதலும் புதுவ தன்றே; வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்
இன்னா தென்றலும் இலமே;.........
... ... ...
... ... மாட்சியிற்

பெரியோரை வியத்தலும் இலமே ;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே "

எனக் கூறி உள்ளார். இஃது எத்துணை உயர்ந்த கருத்தாக அமைந்துள்ளது பாருங்கள்! அவ்வாசிரியர் இத்துணை உயர்ந்த உளப்பண்பு உண்டாவதற்குக் காரணத்தையும் அப்பாட்டிற் கூறியுள்ளார். அது யாதென்னில்,

" நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தனம் ஆகலின் "

என்பது.

இதனால், இருவினை வயப்பட்டு உயிர்கள் இறந்தும் பிறந்தும் வருதல் முதலிய மேலான உண்மைகளை நேர்படக் கண்ட பெரியோர் பண்டு இருந்தனர் என்பதும், அன்னோர் வகுத்த நெறியில் நின்றோர்க்கு மேற்கூறியவை போன்ற நற்பண்புகள் அமைந்திருந்தன என்பதும் விளங்கும். இப் பாட்டு மக்களது நல்வாழ்க்கைக்குச் சமயவுணர்வு இன்றியமையாதது என்பதை விளக்குதற்கு எடுத்துக் காட்டப் பட்டது. இனி, உண்மைச் சமயமாவது கடவுளும், உயிரும், மறுபிறப்பும், இருவினையும், வினைப் பயனும் முதலாக உள்ள உண்மைகளை அடிநிலை உணர்வாகக் கொண்டு ஒழுகும் ஒழுக்க நெறி ஆகும். அதன் அடிநிலை உண்மைகள் எல்லாமக்களுக்கும் எளிதிற் புலனாவன அல்ல ; அவை மெய்யுணர்வினைத் தலைப்பட்ட சில பெரியோர்களால் முன்னர் உணரப்பட்டு, " யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் " என்னும் கருத்தால் உலகிற்கு அவரால் அறிவிக்கப்படுவன ஆகும். ஆதலாற்றான், மேலே காட்டப் பட்ட செய்யுளில் அதன் ஆசிரியரான கணியன் பூங்குன் றனார் " ஆருயிர் - முறை வழிப் படூஉம் என்பது **திறவோர் காட்சியிற் றெளிந்தனம்** " என்றோதுவாராயினர். திறவோர் - மெய்யை உணரவல்ல திறன் உடையோர் ; அவர் அவா அறுத்து மெய்யுணர்ந்தோர்.

இங்ஙனம் மெய்யுணர்ந்த பெரியோர் தம் மாசறு காட்சியிற் கண்டு கூறுவனவற்றைப் புறக்கணிக்கும் புல்லறி

வாளர் இம்மையும் மறுமையும் இழப்பர் என்பதைக் கடுவன் இளவெயினனார் என்னும் நல்லிசைப் புலவர் முருகனை வாழ்த்தும் ஒரு செய்யுளில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார் :—

நின்குணம் எதிர்கொண்டோர் அறங்கொண்டோர் அல்லதை
மன்குணம் உடையோர் மாதவர் வணங்கியோர் அல்லதை
செறுதீ நெஞ்சத்துச் சினம் நீடினோரும்
சேரா அறத்துச் சீரி லோரும்
அழிதவப் படிவத் தயரி யோரும்
மறுபிறப் பில்லெனும் மடவோரும் சேரார்
நின்னிழல், அன்னோர் அல்ல(து) இன்னோர்
சேர்வா ராதலின் யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்,
அருளும் அன்பும் அறனும் மூன்றும்:
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே

என்பது அவர் வாய்மொழி.

இதன் பொருள் : கடப்ப மாலையை அணிந்த மார்பினை யுடைய முருகப்பெருமானே ! நினது அருட் குணத்தை ஏற்றுக்கொண்ட அறங் கொண்டோரும், வீடுபெறுங் குணமுடையோராகிய மாதவரை வணங்கி அவர் நெறி நிற்போரும் என்னும் இவர் நின் தாள் நிழல் சேர்ந்து இருமையும் எய்துவர் ; இன்னோரல்லாது, உயிர்களைச் செறுகின்ற தீய நெஞ்சத்துச் சினத்தை மிக உடையோரும், அறத்தின்கண் சேராத புகழில்லோரும், கூடா வொழுக்கத்தால் அழிந்த தவவிரதத்தை உடையோரும், இப் பிறப்பின் நுகர்ச்சியே உள்ளது, மறுபிறப்பு இல்லை என்னும் மடவோருமாகிய இவர் நின் தாள் நிழலை அடையார் ; ஆகலின், அவர் இகம் பரம் இரண்டுங் கெட்டவர் ஆவர். ஆகலான், நின்னை அடைந்த யாம் இரப்பவை நுகரப்படும் பொருள்களும், அவற்றை உளவாக்கும் பொன்னும், அவ்விரண்டானும் நுகரும் நுகர்ச்சியும் அல்ல ; எமக்கு வீடுபயக்கும் நின்னருளும், அதனை யுண்டாக்க நின்னிடத்து யாம் செய்யும் அன்பும் அவ்

விரண்டானும் வரும் பேரின்ப நுகர்ச்சியாகிய அறனும் ஆகிய இம் மூன்றுமே—என்பது.

இப்பாட்டில் அறம் என்னும் சொல் பேரின்ப நுகர்ச்சி என்னும் பொருளில் வந்துள்ளது. திரு என்னும் சொல்லும் அப் பொருளில் திருமுறைகளில் ஆளப்படுகின்றது. இப் பாட்டுப் பேரின்ப நுகர்ச்சியைச் சிற்றின்ப நுகர்ச்சியோடு புடைபட வைத்துக் காட்டி அவற்றின் இயல்பை விளக்குதல் சிந்தித்தற்குரியது. உலகப் பொருள்களை நம் சிற்றறிவால் அறிந்து அதுபற்றி நம் புத்தியின்கண் தோன்றும் அமைதிக் குணத்தில் அழுந்தி நிற்பதே சிற்றின்ப நுகர்ச்சியாம். அப் பொருள்களின் சேர்க்கையை உண்டுபண்ணும் கருவி பொன். எண் குணங்களேயுடைய சிவமுதலை வியாபக உணர்வாகிய மெய்யுணர்வினல் ஒற்றித்து நின்றுணர்ந்து அவ்வெண்குணங்களும் நம்மாட்டு மேம்பட்டுத் தோன்ற அவற்றில் அறிவடங்கி நின்றழுந்துதலே பேரின்ப நுகர்ச்சியாகும். இங்கு எண் குணங்களின் இணைப்பு நிலையே அருள் எனப்பட்டது. அருளின் சேர்க்கையை உயிர்க்கு உண்டாக்குவது, உயிர் முதல்வன் மாட்டுச் செய்யும் அன்பு. பொன்னல் நுகர்ச்சிப் பொருளும், அப் பொருளது சேர்க்கையால் போகமும் உண்டாகின்றன. இஃது இம்மைப் பயன். இவ்வாறே, அன்பால் முதல்வன் திருவருளும், திருவருட் சேர்க்கையால் பேரின்ப நுகர்ச்சியும் உளவாகும். இது வாழ்க்கையின் மேலான முடிநிலைப்பயன்.

இங்ஙனம், உலக இன்ப நுகர்ச்சியோடு வீட்டின்ப நுகர்ச்சியை ஒப்பித்து விளக்கிக் காட்டும் நெறி சிவநெறி ஒன்றே ஆகும். இறைவனைத் தலைப்பட்டு உணர்தலால் உண்மையன்பும் அவ்வன்பால் அவன்றன் எண் குணங்களில் அழுந்தி நிற்கும் பேரின்பமும் முறையே உளவாகும் என்பதைச் சிவஞானபோதம் "அயரா அன்பின் அரன் கழல் செல்லுமே" என்னும் தொடரால் விளக்குகின்றது. "**எண் குணத்துவேமே**" என்னும் அப்பர் வாய்மொழியும், "**கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான் - தாளை வணங்காத் தலை**" என்னும் பொதுமறையும் இவ்விடத்துச் சிந்திக்தற்குரியன.

இவ்வாறு கடவுள், உயிர், மறுபிறப்பு, இருவினை, வினைப்பயன், வினையின் நீங்கும் நெறி, வீட்டுநிலை என்னும் பேருண்மைகளை அருநூல்களுக்கும் ஆராய்ச்சிக்கும் முற்றிலும் பொருந்துமாறு விளக்கி, முன்பின் முரணுதல் இன்றிக் காட்டும் நெறி சிவநெறி ஒன்றே ஆகும் என்பதை அதனை ஒரு சிறிது ஆராயப்புகுவோரும் உணர்வர். கடவுள் உலகிற்குப் பரம ஆதாரமாகவும், அதனைத் தன் பெரு நிறைவில் அடங்கக்கொண்டு நினைவு மாத்திரையால் சேட்டிப்பிக்கும் நிமித்த காரணமாகவும் உள்ளது என இதன்கண் கொள்ளப்படும். அதனைச் **சிவம்** என அனுபவம் பற்றி வழங்கிவருதல் **நெறி** அல்லது **சைவம்** எனப்படுகின்றது. சிவம் என்னும் சொல் நிலைத்த, தூய பேரின்ப வடிவமாய் அனுபவப்படும் பொருள் என்னும் கருத்தைக் குறித்து நிற்பது. திருக்குறளில் மெய்யுணர்தல் என்னும் அதிகாரத்தில் கூறப்படும் **செம்பொருள்** என்பதன் பரியாயமே **சிவம்** என்பது.

சிவநெறிக்கு முதன்மையும் சிறப்பும் பல காரணங்களால் உளவாகின்றன. அதன் தொன்மையைக் கருதும் போது, அது வேதகாலத்துக்கு முற்பட்ட பழமையை உடையது என்பது ஆராய்ச்சியாளர்களின் துணிபு.

மேலும் வடமொழி தென்மொழி என்பவற்றில் வைதிகச் சார்புள்ள எல்லா நூல்களுக்கும் பயனாக விளங்குவது சிவநெறியே ஆகும். "வேதப் பயனும் சைவமும் போல்" எனச் சேக்கிழார் அடிகள் எடுத்துக் காட்டுகிறார். "வேதம் என்னும் பாதபம் (மரம்) வளர்த்தனை; பாதபமதனில் படுபயன் பலவே;........; ஒரும்வே தாந்த மென்றுச்சியிற் பழுத்த - ஆரா இன்ப அருங்கனி பிழிந்து சாரங்கொண்ட சைவசித் தாந்தத் தேனமு தருந்தினர் சிலரே" என்கின்றார் குமரகுருபர அடிகள்.

இன்னும் இந்நெறி விரிந்த மனப்பான்மையை வளர்ப்பதாக உள்ளது. "அறிவினால் மிக்க அறுவகைச் சமயம் அவ்வவர்க்(கு) அங்கே ஆரருள் புரிந்து"; "விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்தே - எரிவினாற் சொன்னா ரேனும் எம்பிராற்கேற்ற தாகும்"; "அந்நிய நூலின் விதியவி ரோதமேல் உன்னேல் பழுதென் றுளத்து", "எவ்வுயிரும் நீங்கா துறையு மிறைசிவ

னென்(று)-எவ்வுயிர்க்கும் அன்பாயிரு" என்றாற்போன்ற வாய்மொழிகளைச் சைவ இலக்கியங்களில்தான் காண முடியும்.

இங்ஙனம் பல்லாற்றானும் சிறப்புள்ளதாய் விளங்கும் சிவநெறியைப் பின்பற்றி ஒழுகுவதோடு அதன் அடிப்படைக் கொள்கைகள் யாங்கணும் பரவி உலக மக்களுக்கு உணர்வும் இன்பமும் பயக்குமாறு செய்தல் சைவநன் மக்கள் கடமை ஆகும்.

இக் கடமையை நன்கு ஆராய்ந்து மேற்கொள்ளுதற்கு இம் மாநாடு வாய்ப்பைத் தருகின்றது. சொற்பொழிவாளர்களும் மற்றையோரும் அவ்வாராய்ச்சிக்கும் செயலாற்றுக்கும் பெரிதும் துணைபுரிவர் என நம்புகிறேன்.

மீண்டும் அனைவர்க்கும் எனது வணக்கம்.

---

# சேக்கிழார் திருவாக்குண்மை

## (ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர்)

[மயிலத்தின்கண் நிகழ்ந்த சைவ இளைஞர் மாநாட்டுக்கு வாழ்த்துரை வழங்கிய சிவக்கவிமணி - **ஸ்ரீலஸ்ரீ சம்பந்த சரணாலயத் தம்பிரான் சுவாமிகள்**, தமது வாழ்த்துரையின் இடையில், "பெரிய புராணத்தினைப் பாடியவர் சேக்கிழார் என்றே பலரும் கூறுவர். அது தவறு. நடராசப் பெருமான் பாடினார் என்பதே உண்மை" என்று குறிப்பிட்டார்கள். சுவாமிகள் சுருக்கமாகக் குறிப்பிட்ட இக்கருத்தினையே, சிவத்திரு. **மறைமலையடிகளார்க்கு** ஆசிரியராகத் திகழ்ந்த சைவ சித்தாந்த சண்டமாருதம் **ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர்** அவர்கள், தடைவிடைகளுடன் அளவையியல்நெறி வளம்பல செறியவும், தமது நுண்மாண் நுழைபுலந் தோன்றவும் விரிவாக விளக்கி, இற்றைக்கு ஏறத்தாழ 60—70 ஆண்டுகளுக்கு முன்னர் மேலைத் தலைப்பில் வரைந்துள்ள கட்டுரையின் முதன்மைமிக்க பகுதிகள், ஈண்டுத் தொகுத்துத் தரப்பெறுகின்றன. ஸ்ரீலஸ்ரீ நாயகர் அவர்களின் அளப்பரிய நுண்ணுணர்வும் சொல்வன்மையும் பிறவும் இனையவென அறிந்து அன்பர்கள் இன்புறுவார்களாக! —முருகவேள்.]

"உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்

அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம் "

என்னும் இத் திருவாக்கின் மான்மியத்தை யுரைப்பது ஸ்ரீ சிவபெருமானுடைய திருவருள் இருந்தன்றி அமையாது. " உலகெலாம் " என்று ஸ்ரீ நடராஜப் பிரபுவே முதலெடுத்துக் கொடுக்க ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் பாடியருளியதாகையால், திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணத்தின் முதற் செய்யுள் ஆகிய இதன் பெருமையே பெருமை ! இந்தப் பாடலில் கடவுள் வாக்கு ஓர் பாகமும், ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் வாக்கு மற்றைப் பாகமுமாகக் கலந்திருக்கின்றன என்பதன் கருத்தை யுய்த்துணருங்கால் எல்லாம் கடவுள்வாக்கு என்பதே உண்மையாக முடியும்.

எங்ஙனமெனின், கடவுள் வாக்குடன் கடவுள் அல்லாதவராகிய ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் வாக்கு விரவியதெனின், கடவுளை நின்மலராகக் கொள்ளுந் தன்மையால் ஒன்றி லொன்று சேர்தல் பொருந்தாது. ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் வாக்கும் கடவுள் வாக்கைப் போல நின்மலம் உடையதாகலின் ஒன்றிலொன்று சேரும் எனின், அப்போது ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகளும் கடவுளேயாகக் கொள்ளப்பட்டு இரண்டு கடவுளருக்கு இடஞ் செய்ததாய் முடியும். சேக்கிழார் சுவாமிகள் வாக்கே நின்மலமான போது அதற்குக் கடவுள் முதல் எடுத்துக் கொடுப்பது என் ? என்னும் ஆசங்கையும் வரும். கடவுள் வாக்கும், ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் வாக்கு ஒன்றிலொன்று தாரதம்யப்படவே கலந்திருக்கின்றன எனின், சமான ஹீனமாகிய வாக்குடன் தமது வாக்கைக் கடவுள் கலப்பார் என்பது அஸங்கதம். வேதபுருடன் ஸ்ரீ சிவபெருமானை நோக்கித் தேவரீரை இதர தெய்வங்களோடு ஸமானமாக வரித்துத் துஷ்ட ஸ்தோத்திரங்களாற் கோபம் வரச் செய்யமாட்டோம் என்று சொல்லியிருப்பதால், அவர் தம்மில் தாழ்ந்தவர் குழுவிற் சேர்ந்து சந்மானத்தை யடையாதது போல, அவர் வாக்கும் தாழ்ந்த வாக்கிற் கலந்து நில்லாது என்க. அவரை வரித்துப் பூசிக்கின்ற காலையில் வேறு தேவர்களை வரித்து அவர்திருமுன்னர்ப் பூசித்தலும், பிறரைப் பூசிக்கின்ற காலையில் அவர்களோடு உடனிருத்தி ஸ்ரீசிவபெருமா

ஊப் பூசித்தலும் பொருந்தா என்பது மேற்காட்டிய வேத புருடன் கருத்தாக விளங்குகையால், பரஸ்பரம் விஜாதிக மான சாமானிய வாக்கு ஒன்றுடன் பரமபதியாகிய அவரே தமது வாக்கைக் கலப்பார் என்பது எங்ஙனம் பொருந்தும் ?

பிறர் செய்தாற் குற்றமாகுமேயன்றித் தாமே செய் தாற் குற்றமில்லை எனின், அப்போது கடவுட் டன்மைக்கே பங்கம் வரும். அங்ஙனம் தாமே செய்யவேண்டிய ஆவசி யகந்தான் யாது ? என்பதற்கும் சமாதானம் சொல்ல வேண்டி நேரும். மேற்சுருதி யாதாவால் பிறர் சிற்றறிவின ராகவும் அவர் செய்தற்கே யுடன்படாராகிய அக்கடவுள் தாமே தங்கொள்கையை விரோதிப்பார் என்பது எப்படி அமையும் ? ஸ்ரீ சேக்கிழார் வாக்குடன் கடவுள் வாக்கும கலந்த விஷயம் சந்தேகம் எனின், அதைக் காட்டிலும் கடவுளையே சந்தேகிப்பது மிகு விசேடமாம். இன்னும் இதை விசாரிப்பது அவசியம் அன்றென விடுப்பதே பெரு நலமாம். சைவம் என்னும் ஸித்தாந்தத்திற் கட்டுண்ட பரி பாகிக்கே இந்த விசாரம் ஆகையால், அவன் இன்ன ஹேயா வலம்பனத்தின் நிகழ்தல் செய்யான். அவனுக்கு அச் சமயத்தாற் பெறப்படும் யாவும் உண்மையெனக் கொள் ளும் துணிவுடைமையால், அத்துணிவு பற்றி விசாரித்தல் ஒன்றே யுரிய கடமையாம். அதனால் இனிப் புறச்சமயிகள் கூற்றைக் கலந்து விவகரியாது விடுப்பாம்.

புறச் சமயிகளுக்கும் ஒப்ப நியாயம் சொல்லவேண்டு வது தானே எனின், புறச்சமயிகள் அநேகருள் கடவுளே யில்லை என்பவனுக்கு எவ்வளவு எடுத்துச் சொன்னாலும் என்ன பலன் ? முதலிற் கடவுளிருப்பை அவனுக்கு விளங் கக் காட்டியன்றோ பின்னர் மற்றைய விஷயங்களை யுணர்த் தல் வேண்டும் ? அதற்குப் புண்ணியம் இருந்தன்றோ அவ னுக்கு ஸித்திக்க வேண்டும் ? நமது பாஷை அவனிடம் பிரயோஜனப்படாது என்க. அவன் நாமாகிற வரையில் ! அவன் நம்ம தன்மை அடைவனே எனின், நாயும் பேயுமே நாளைக்கு நம்ம தன்மை யடைவது ஸித்தமாக, எவ்வளவோ படி கடந்து வந்தவனாகிய அவன் வரமாட்டான் என்பது எங்ஙனம் ? " புல்லாகிப் பூடாய்ப்...மெய்யேயுன் பொன் னடிகள் கண்டின்று வீடுற்றேன் " என்னும் அருளாளர் திருமொழிப்படி கண்டுகொள்க. அன்றியும், " புறச் சமய

நெறி நின்றும்...ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" என்னும் பிரமாணத்தாலும் காண்க. இந்த அருள் வாக்கியங்களால் இன்றுள்ள அற்பச் சிற்றுயிர்களும் நாளைக்கு ஞானிகளாவர் என்பதும், அப்படியே புறச்சமயிகளும் பரிபாகம் வரப்பெற்றுக் கிருத கிருத்யர் ஆவார்கள் என்பதும் வெளிப்பட்டன. இவ்வாற்றால் இன்றைக்கு அற்பச் சிற்றுயிர்களாக எண்ணப்படுவன நாளைக்கு ஞானிகள் ஆகப்போவது ஸித்தமா யிருந்தும், பின்னர் அப்படியாகப் போகிற அற்பச் சிற்றுயிர்களுக்கு இப்போதே அந்த ஞானத்தை ஸித்திக்கச் செய்ய முயல்வது எப்படிக் கஷ்டமும் அறியாமையுமாய் முடியுமோ, அப்படியே புறச்சமயிகள் மாட்டும் கொள்ளத் தக்கதாம். அற்றேல், புறச்சமயிகள் ஒருநலனும் இதனால் எய்திக் குணப்பட இடமுண்டாகாத போது அவர்களைக் குறித்துச் சிவதத்துவங்களை நம்ம ஆசாரியர்கள் வெகுவாகப் பிரசங்கித் திருப்பது என்னை யெனின், அதனுண்மையை விளக்குதும். சிவசாம்ராஜ்யப் பெருஞ் செல்வத்தை யடைதற்குரிய நம்மவர்கள் அப்புறச் சமயிகள் துர்ப்போதங்களாற் கலங்கா வண்ணமும், புறச்சமயிகள் பகிரங்கமாக வெளிப்பட்டு நம் சமயத்திற் புகுந்து சைவத்தை அவலம்பித்திருக்கும் புண்ணியம் கைகூடாவிட்டாலும் அப்படிக் கூடுதற்கான ஹேதுவாக அவர்களுள் எவர் நெஞ்சிலாவது ஒருகால் உண்மை தைத்து உய்யும் வண்ணமும், நம் பெருமக்கள் செய்கை பெருமை பெற்று நிலைக்கும்! நிலைக்கும்!!

இஃதிங்ஙன நிற்க,மேலெடுத்துக்கொண்ட விஷயத்தை விசாரிப்பாம். சுவாமிகள் அருளிச் செய்ததாகப் பெறப்படும் அத் திருவாக்கின்கண் ஒரு சிறு பாகமே ஸ்ரீ நடராஜமூர்த்தி முதலெடுத்துக்கொடுத்த தன்றி வேறில்லை. ஏனையவெல்லாம் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் பாடியருளியது. இங்ஙனமாக, அதிக பாகத்துக்கு ஆக்கியோராகிய ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் வாக்கை அற்ப பாகத்துக்கு ஆக்கியோராகிய கடவுள் வாக்கில் வியாப்பியம் கூறுவது பொருந்தா தெனின்; அதிகபாகத்தை அருளிச் செய்தவராகிய ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் என்னை அந்த அற்ப பாகமும் சொல்லத் தெரியாதவரா? அவருக்கு ஏன் அந்தப் பாகத்தை முதலாகக் கடவுள் எடுத்துக்கொடுக்கவேண்டும்? ஸ்ரீ சேக்கிழார்

சுவாமிகள் அந்தப் பாகமும் சொல்லுவார்! அதற்கு மேலும் சொல்லுவார்! கடவுள் வாக்கில் விஜாதிகம் ஆகிற படி. அவர்தாம் என்னே, யாம் சொல்லமாட்டேமா? எம் மளவுக்கு இசைந்தபடி. எம்மளவின்படி யாம் சொல்லுவது போலவே, ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் தம்மளவின்படித் தாமும் சொல்லுவரே யன்றிக் கடவுள் தம்மளவின்படிக் கூறிய பாகத்தில் எப்படி ஸாம்யம் பெறும்? கடவுள் ஸ்ரீ சேக்கிழார் ஆகாமையாலும், ஸ்ரீ சேக்கிழார் கடவுள் ஆகா மையாலும் அவரவர் அளவின்படி வாக்குகள் போந்திடு மாயின், அவை தாரதம்யம் உடையனவாயே இருக்கும் என்பது பெற்றும். இதனல் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் தம்மளவின்படித் தாமே அதிக பாகங்களை அருளினர் என்பதும் சேராதொழியும். பெரிய புராணத்தில் "உல கெலாம்" என்று ஸ்ரீ நடராஜமூர்த்தியால் முதலெடுத்துக் கொடுக்கப் பெற்ற அற்ப பாகம் எந்த அளவுடைத்தோ, அந்த அளவே மற்றை அதிக பாகங்களும் ஸாம்யம் பெற்று விளங்கலுண்மையால், அவை ஒரே தன்மையின என்றல் அமையும்! இதனல் இரண்டு வாக்குகளும் ஒரே வாக்கு என்பதும் பெறுதும்.

இப்படிக் கொள்ளுங்கால் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் தமது போதத்தால் அன்றித் திருவருட் போதத்தால் அரு ளியபடியேோ எனின், அவர் என்னே? சிவனடியார் தம்மிற் பலர் திருவருட்போத மேலிட்டாற் பாடினராகலின், அவர் வாக்குகள் எல்லாம் சிவவாக்காகுமா? சிவனடியார் வாக்குகள் என்பதே போதரும். இதுவும் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் வாக்கு எனலால் சிவனடியார் வாக்கு என் றலே அமையும் எனின், இதற்கே யன்றி ஏனைய வாக்கு களுக்குக் கடவுள் முதலெடுத்துக் கொடுத்தனரா? இப் போது விசாரமெல்லாம் கடவுள் முதலெடுத்துக் கொடுத் தருளிய முக்கியம் பாராட்டியே யாகையால், ஏனைய சிவ னடியார் வாக்குகள் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் வாக்கு டன் ஸாம்யம் பெரு என்க. ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த "திருத்தொண்டத் தொகை"க்குக் கடவுள் முதலெடுத்துக் கொடுத்தமையால், அவர் திருவாக்கும் சிவ வாக்காகுமே எனின், அவரே சிவமாகையால் விசாரிப்பது அவசியம் அன்றும்; கடவுள் முதலெடுத்துக் கொடுத்தாலும்

கொடாவிட்டாலும் அவை ஒரே தன்மை பெறுதலால்; ஆலாலசுந்தரரே ஸ்ரீ சுந்தர மூர்த்திகளாகத் திருவவதாரம் செய்தபடியால். இப்படியே சிவவிபூதிகளாகிய ஸ்ரீகுமாரக் கடவுள் ஞானசம்பந்த மூர்த்திகளாகவும், சிவகணத்தலைவர் வாகீச மூர்த்திகளாகவும், நந்தியெம்பெருமான் ஸ்ரீமந் மாணிக்கவாசக மூர்த்திகளாகவும் திருவவதாரம் செய்தமையால் அவர் வாக்குகளும் சிவவாக்கேயாம். நால்வராசிரியர் வாக்குகளோடு ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் வாக்கும் சேர்க்கப்பட்டுத் திருமுறைகளாக எண்ணப்பட்டதனால் மற்றைத் திருமுறைகளும் சிவவாக்காகுமே எனின், அவைகளையும் திருமுறைகளாக ஆன்றோர் தொகுத்த முறைமையானே அவற்றின் ஏற்றம் வெளிப்படலால் அவை சிவவாக்காதலில் இழுக்காவென்க.

இனி, ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் திருவாக்கு எப்படிச் சிவவாக்கு ஆகும் என்பதைச் சற்றே விளக்குவாம். ஸ்ரீ நடராஜ மூர்த்தி அவருக்கு "உலகெலாம்" என்று முதலெடுத்துக் கொடுத்தருளினர் என்பது உண்மையன்றோ? அப்படி யெடுத்துக் கொடுக்குங்கால் அவர் என்னை திருமேனி சார்த்தி வெளிப்பட்டு நேரில் நின்று அருளிச் செய்தனரா? அசரீரியாக நின்று அருளிச் செய்ததே யன்றி வேறில்லை. அப்படியே ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகளை அதிட்டித்து ஏனைய பாகங்களையும் அவரே சொல்லியருளினர் என்பதே மேலோர் கருத்தாம். ஆகாயம் என்னும் ஒரு பூதத்தை இடமாகக் கொண்டு முதலெடுத்துக் கொடுத்தபடியே, ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகளை இடமாகக்கொண்டு ஏனைய பாகங்களையும் அருளிச் செய்தபடியாம். இலிங்க வடிவத்தை அதிட்டித்து "நில்லு கண்ணப்ப! நில்லு கண்ணப்ப!! என் அன்புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப!!!" என்று ஸ்ரீ கண்ணப்ப தேவருக்கு அருளிச் செய்தபடியும் இதற்குப் போந்த நிதரிசனமாம். ஸ்ரீ சிவ பெருமான் திருமேனி சார்த்தி வந்தருளிச் செய்தலும், அசரீரியாக நின்றருளிச் செய்தலும், சிவலிங்கப் பெருமானை அதிட்டித்து நின்றருளிச் செய்தலும், சிவனடியார்களை அதிட்டித்து நின்றருளிச் செய்தலும் அருண்மரபு ஆகையால் அவையே ஈண்டு ஸித்தாந்தம் ஆயிற்றென்க. இந்த உண்மையால் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் ஒன்றும் சொல்லியதில்லை

எனவும், யாவும் ஸ்ரீ நடராஜமூர்த்தியே அருளிச் செய்தார் எனவும் வெளிப்பட்டது. இப்படிக்கன்றி வேறுவிதத்தாற் கோடல் அமைதி பெறாது என்க.

ஸ்ரீ சிவபெருமான் சராசரங்கள்தோறும் கலந்திருந்து அவ்வவற்றின் இயல்பு அறிந்தியங்கச் செய்வது வேதஸம்மத மாகலின், யாவும் யாவரும் அச்சிவனையன்றி ஒன்றும் செய்யவும் சொல்லவுங் கூடாதல்லவா? அப்போது யாவர் சொல்வதும் கடவுள் சொல்வதே யாகிறபடியால் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகளுக்கு மாத்திரம் விசேடம் என்னை எனின், யாவர் சொல்லுவதையும் சொல்லுவிக்கின்றவர் கடவுள் என்றபடியே யல்லது கடவுளே சொல்லுகின்றார், சொல்லினார் என்பது பொருந்தாதென்க. கடவுள் சொல்லுவிக்கின்றார், சொல்லுவித்தார் என்பதே அமையும். சிவலிங்கத்திடம் இருந்து அவர் ஒன்றைச் சொல்லுகையில் சிவலிங்கம் சொல்லிற்று என்பதன்றி, அவர் சொல்லுவித்தார் என்றல் அமையாமைபோலவே, ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகளிடமும் கொள்ளற்பாலதென்க. ஆயின், ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகளை அதிட்டித்துப் பின்பாகங்களை ஏராளமாய் அருளிச்செய்த கடவுள் முன்பாகத்தைக் கொஞ்சம் என் அசரீரியாக இருந்து சொல்லினரெனின், பின்சொல்லப்போகிற பாகத்தின் பெருமை வெளிப்படும் பொருட்டென்க. உலகத்தில் அசரீரியாக நின்று சொல்லியதையே கடவுள் வாக்கென்று கொண்டிருக்கின்றனரே யன்றி ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் வாக்கை அதிட்டித் துரைத்தபடியை அறிந்ததில்லையன்றோ? உலகத்தில் அதன் பெருமை தோன்ற உரைக்க வந்தவர் ஆகையால், அவ்வுலகர் அநுபவத்தின்படி உசிதம் பெற அசரீரியாக நின்று உரைத்தபடியாம். உண்மையை ஊகிக்கின், அசரீரியால் உரைத்ததென்று நாம் கொண்டிருப்பதைக் காட்டிலும், ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகளை அதிட்டித்து நின்றுரைத்ததே விசேடமாம்.

எங்ஙனமெனின், அசரீரியாக நின்றுரைத்தார் என்கையில், அங்ஙனம் நின்றருளிய இடம் பூதாகாயமாகையால் அதுவே திருமேனியாகிச் சடத்துவம் பெறும். அப்படியே ஸ்ரீசேக்கிழார் சுவாமிகளிடம் விசாரிக்கையில் அவருள்ளமாகிய ஞானகாய இடமே திருமேனியாகிச் சித்தாதல் நிலையுதல் பெறும். இரண்டினும் சித்துக்கே விசேடம் கூறப்படு

வதால் ஸ்ரீசேக்கிழார் சுவாமிகளை அதிட்டித் துரைத்தமையே ஸ்ரீ சிவபெருமான் இச்சை யிருந்தபடியாம். பூதாகாயத்தில் விரவி யுரைத்தருளியது பின்னுரைக்கப் போகும் அதன் பெருமையை விளக்க ஹேதுவாக இருந்தமையின் அதுவும் ஸாமஞ்சஸமே பெறும். இரண்டும் தம்மில் பேதமுறினும் அதிட்டித்த பரன் வாக்கு அபேதமே பெற்று அமையும். ஜடாகாயத்தை மேல் உண்டாகப் போகிற மகிமைக்கு ஹேதுமாத்திரத்தால் அதிட்டித்துச் சிதாகாயத்தையே யுரிமையாகக் கொண்டமையால் பூரணமாக அதிட்டித்து முற்றும் அருளிச் செய்தபடிக் கண்டுணர்க. மேல் விசாரத்தால் பூதாகாயத்தை இடமாகக் கொண்டு பரன் சொல்லியதும் ஸ்தூலப் பார்வையில் அசரீரியும், ஸூக்ஷ்மப் பார்வையில் சரீரியுமாக நின்று அருளிச்செய்தார் என்பதாகக்கொள்ள வரும். இன்ன மஹிமாதிசயங்கள் போதரக் காணும் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் திருவாக்கு ஆகிய பெரிய புராணத்தின் ஏற்றத்தை யாவரே அறிய வல்லார்? சேக்கிழார் வாக்கெனினும் சிவபெருமான் திருவாக்கெனினும் ஒக்குமேனும், சேக்கிழாரும் சிவபெருமானும் ஒருபொருள் அல்ல என்பதும் தெளிந்திடுக! உலகம் மாயையிற் றோன்றும் எனினும், பரமனிற் றோன்றும் எனினும் ஒக்குமேனும், மாயையும் பரனும் ஒன்றாகாத படியை விசாரித்துத் தெளியுமா போல! இவ்விடயத்தில் இன்னும் அநந்த ஸமாதானங்களை இதுகொண்டே புத்திமான்களா யுள்ளபேர் தெளிந்துரைக்கக் கூடுமாகையால் இதை இவ்வளவில் விடுத்தாம்..........

" பொன்னவிருஞ் சடைமௌலிப் புண்ணியனைத்
தெழுத்துண்மை புவியில் ஓங்கி
மெய்ந்நெறியாஞ் சைவநனி வாழவரும்
மெய்ஞ்ஞான வேந்தாய் அன்பர்
தந்நிலைமை உலகறியத் தம்பிரான்
முதலெடுத்துத் தாஎற் றுண்மை
துன்னுமவர் புராணநவின் றிடுமுனியாஞ்
சேக்கிழார் துணைத்தாள் போற்றி "

—ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர்

——

## சைவ சித்தாந்த மகா சமாஜம்

# 53-வது ஆண்டு அறிக்கை

(ஆண்டு 1958)

---

திருவருள் துணைகொண்டு சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 1958-ஆம் ஆண்டு நிர்வாக அறிக்கை சமர்ப்பிக்கப் படுகிறது.

### சமாஜ உத்தியோகஸ்தர்கள்

### 1-1-1958 முதல் 18-4-58 வரை

**தலைவர் :** திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி.ஏ., பி.எல். அவர்கள்.

**உப தலைவர்கள் :** திரு. ராவ்சாயிப் - நல். முருகேச முதலியார், பி. ஏ. அவர்கள்; திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ., எல். டி. அவர்கள்.

**காரியதரிசி :** திரு. எம். நித்தியானந்தம், பி. ஏ. அவர்கள்.

**உதவிக் காரியதரிசி :** திரு. மா. ப. தியாகராஜ முதலியார், பி.ஏ. அவர்கள்.

**பொருட்காப்பாளர் :** அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம். ஏ. அவர்கள்.

### 19-4-58 முதல் 31-12-58 வரை

**தலைவர் :** திரு. ராவ்சாயிப் - நல். முருகேச முதலியார், பி. ஏ. அவர்கள்.

**உப தலைவர்கள் :** திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி. அவர்கள்; திரு. அ. சோமசுந்தரஞ்செட்டியார், எம்.ஏ. அவர்கள்.

**காரியதரிசி :** திரு. மா. ப. தியாகராஜ முதலியார், பி. ஏ. அவர்கள்.

**உதவிக்காரியதரிசி:** திரு. வித்துவான்-அம்பை-சங்கரனாரவர்கள்.

**பொருட்காப்பாளர் :** திரு. சி. நீ. சிங்காரவேலு முதலியார், எம். ஏ. அவர்கள்.

சைவ சித்தாந்த மகா சமாஜம் முதன்முதலில் திருப்பாதிரிப்புலியூரில் ஸ்ரீமத் ஞானியார் சுவாமிகள் மடாலயத்தில், விசுவாவசு ஆண்டு ஆனிமீ (7-7-1905) வெள்ளிக்கிழமை தொடங்கப்பெற்று இன்றுவரை இறைவன் திருவருளால் மேன்மைகொள் சைவநீதி உலகெலாம் விளங்கச் சமயத் தொண்டாற்றி வருகின்றது. அடிகளார் ஆரம்பித்துத் தந்த இச்சமாஜம் சபைப்பதிவுச் சட்டப்படி 11-12-1915-ல் S. No. 6 of 1915-16 என்ற எண்ணோடு பதிவு செய்யப்பட்டுள்ளது. சமாஜத்தின் விதிகள் 1955-ம் ஆண்டில் திருத்தப்பட்டுள்ளன.

சமாஜத்தின் பொன் விழா தில்லையில் 1955-ல் வெகு சிறப்பாக நடந்தேறியது. அதன்பின் 1956-ல் சந்தான குரவருள் ஒருவராகிய மெய்கண்டதேவ நாயனார் அவதரித்த பெண்ணாகடம் என்ற திருப்பதியில் மாநாடு நடைபெற்றது. 1957-ல் திருமயிலையில் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் தலைமையில் மாநாடு நடைபெற்றது. இவ்வாண்டு மயிலம் எனும் இத்திருப்பதியில் இம்மாநாடு கூடுகிறது.

## சமாஜத்தின் நோக்கங்கள்

“ ஒல்லும் வகையால் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாம் செயல் ”

என்ற பொய்யாமொழிக்கிலக்காகச் சைவ சமயத்தை வளரச் செய்வதே சமாஜத்தின் தலையாய நோக்கமாகும். அதற்காவன செய்யும் பணிகளுள் முக்கியமானவை : (1) சைவ சமய சாத்திர தோத்திர நூல்களை அடக்கவிலைப் பதிப்பாக அச்சிட்டு வழங்கல். (2) “ சித்தாந்தம் ” என்னும் உயரிய பத்திரிகையை மாதந்தோறும் அரிய கட்டுரைகளுடன் வெளியிடல். (3) சமயச் சொற்பொழிவுகள், மாதக்கூட்டங்கள் முதலியன ஆங்காங்கு நடத்துதல். (4) ஆண்டுதோறும் மாநாடு கூட்டிச் சமயப்பணி செய்யும் திட்டங்களை வகுத்து நடைமுறைக்குக் கொண்டுவருதல். (5) சைவ சமயாசாரியர்கள், நாயன்மார்கள், சந்தானகுரவர்கள் ஆகிய இவர்களுடைய

திருநட்சத்திரங்களைக் கொண்டாடுதல். (6) "சைவப் புலவர் தேர்வு" "இளஞ்சைவப் புலவர் தேர்வு" ஆகிய இவைகளை நடத்தி, மாணவர்கள் சைவசமய நூல்களைக் கற்க ஊக்குவித்தல். (7) சிவாலயங்களில் வார வழிபாடு நடத்திக் காட்டி இறை வழிபாட்டில் மக்களை ஈடுபடுத்துதல். (8) துண்டுப் பிரசுரங்கள் மூலம் சமய போதனைகள், நாயன்மார்கள் சரித்திரங்கள் வெளியிடுதல் முதலியன.

இத்தகைய சிரிய நோக்கங்களைக் கொண்டு இவ்வாண்டு சமாஜம் செய்துள்ள பணிகளின் விவரங்களை ஈண்டு விளக்குவாம்.

(1) புத்தக வெளியீடு

சென்ற ஆண்டு விழாவில் "முருகன் முந்நூல்", "திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி (சிற்றுரையுடன்)", "குகார்ச்சனைத் திருமந்திரம்" ஆகிய மூன்று நூல்கள் வெளியிடப்பட்டன. அவைகளின் விலை மிகக் குறைவாக முறையே 40 புதுக்காசு, 5 புதுக்காசு, 6 புதுக்காசாக அமைக்கப்பட்டன. இவ்வாண்டு "ஞானியார் சுவாமிகள் நினைவுமலர்" "சிவஞானபோதச் சிற்றுரை" வெளியிடப்பெறுகின்றன. முதற் குறித்தநூலின் விலை ரூ. 2. இம்மாநாட்டில் வாங்குபவர்களுக்கு அரை ரூபாய் குறைத்து ரூ. 1·50க்குக் கொடுக்கத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. "சிவஞானபோதச் சிற்றுரை" விலை ரூ. 12 புதுக்காசு. இன்னும் முன்னாண்டுகளில் அச்சிட்ட பெரியபுராணம், திருப்போரூர் சந்நிதிமுறை, சிவாக்கிர யோகிகள் சித்தியார்—விளக்கவுரை, சமாஜப் பொன் விழா மலர், திருவெம்பாவை—திருப்பள்ளியெழுச்சி விளக்கவுரை முதலியன பெரும்பகுதி விலைப்படுத்த வசதியில்லாமலிருத்தலால் அவைகளின் மதிப்புத்தொகை சுமார் ரூ. 4000 முடங்கிக்கிடக்கின்றது. அத்தொகை கைவசமாயின் வேறு நூல்கள் அச்சிட்டு வழங்க ஏதுவாகும். அங்கத்தினர்களும் பொதுமக்களும் அந்நூல்களை விரைவில் வாங்கி அக்குறைபாட்டை நீக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றோம்.

(2) "சித்தாந்தம்" வெளியீடு

இச்சிறந்த மாதப்பத்திரிகை சமாஜ அங்கத்தினர்களுக்கு இலவசமாக வழங்கப்பட்டு வருகிறது. போதிய அங்கத்தினர்களுடைய தொகைப் பெருக்கம் இல்லாக்குறையால் இப்பத்திரிகையின் அளவைப் பெரிதாக்கி இன்னும் அரிய கட்டுரைகள் பல வெளியிட இயலவில்லை. தற்போது அங்கத்தினர்களாக இருப்பவர்களுடைய எண்ணிக்கை 497. அவர்களுள் ஆயுள் சந்தாதாரர்கள் 82 போக ஆண்டுச் சந்தா ரூ. 3 செலுத்தும் அன்பர்கள் எண்ணிக்கை 415. ஆகச்சந்தா வருமானம் ரூ. 1245-ஐக் கொண்டு 12 இதழ்களை ஓராண்டிற்கு அச்சிடவேண்டியிருத்தல் காரணமாக இவ்விதழ் இளைத்த தோற்றமுடன் இரண்டு பாரங்களில் அச்சிடப்பட்டு வருகின்றது. இப்பத்திரிகையை மிகுதியான பக்கங்களுடனும் படங்களுடனும் வெளியிடவேண்டுமானால் அங்கத்தினர்களுடைய எண்ணிக்கை இன்னும் குறைந்தபக்ஷம் 500 ஆவது அதிகப்படவேண்டுமென்பது சொல்லாமலே விளங்கும். ஒவ்வொரு அங்கத்தினர்களும் இதை மனத்திற்கொண்டு தங்களுடைய நண்பர்களைச் சேர்ப்பித்து உதவ வேண்டுமெனக் கேட்டுக்கொள்கின்றோம். தேவாலயங்கள் மடாலயங்கள் நூல் நிலையங்கள் வாசகசாலைகள் முதலிய நிலையங்களும் வாங்க முன்வரல் வேண்டும்.

(3) கூட்டங்கள்

இவ்வாண்டு நிர்வாக சபைக் கூட்டம் 13 முறை கூடிற்று. ஒவ்வொருமாதமும் இரண்டாவது ஞாயிற்றுக்கிழமை இக்கூட்டம் கூட்டவேண்டுமென்னும் தீர்மானத்தைக்கொண்டு, அவ்வப்போது சமாஜ வளர்ச்சிக்கும் சமய வளர்ச்சிக்கும் ஆவன செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

பொதுக் கூட்டங்கள் : இவ்வாண்டு ஐந்து பொதுக் கூட்டங்கள் நடத்தப்பட்டன. 15-12-1957-ல் கூடிய கூட்டத்தில் சமாஜ 52-வது ஆண்டு வரவு செலவுக் கணக்குகளும் அறிக்கையும் ஆமோதிக்கப்பட்டன. 29-12-1957-ல் திருமயிலையில் கூடிய மாநாட்டில் காலஞ்சென்ற சமாஜத்

தலைவர் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. அதில் 1958-ம் ஆண்டுக்குச் சமாஜ உத்தியோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 16-3-1958-ல் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் பிரிவாற்றுமை குறித்து ஒரு பொதுக்கூட்டம் இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்ரமணிய பக்தஜன சபையில் கூடிற்று. அக்கூட்டத்தில் தீர்மானித்தபடி திருமயிலை P. S. உயர்நிலைப் பள்ளியில் ஓர் இரங்கற்கூட்டம் 6-4-58-ந் தேதி நடைபெற்றது. கனம் மந்திரியார் திருவாளர்-ம. பக்தவத்சல முதலியாரவர்கள் அக்கூட்டத்திற்குத் தலைமை தாங்கினர். திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்களுடைய உருவப்படம் தர்மரக்ஷாமணி திரு. K. பாலசுப்ரமணிய ஐயர், எம்.எல்.சி. அவர்களால் திறந்துவைக்கப்பட்டது. பேராசிரியர் T. P. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள், ஸ்ரீமதி. சௌந்தரம் கைலாசம் அம்மையார் முதலிய பெருமக்கள் தலைவரவர்கள் செய்த பெரும்பணிகளைப் பாராட்டித் தங்களுடைய அனுதாபத்தைத் தெரிவித்தார்கள். அவர்களுடைய நினைவுச் சின்னமாக ஒரு கட்டிடம் அமைக்கப்பட வேண்டுமென்றும் அக்கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது. அதற்கெனத் திருவாளர் மணலி. இராமகிருஷ்ண முதலியார், பி. ஏ. அவர்களும் திருவாளர்-அ. சோமசுந்தரம் செட்டியார், எம். ஏ. அவர்களும் பொருளுதவி செய்வதாகத் தெரிவித்துள்ளார்கள். அதுபோல் பெருமக்கள் இன்னும் சிலர் முன் வருவார்களேயானால் அத்தீர்மானம் சீக்கிரத்தில் நிறைவேற்றப்படுவதோடு சமாஜத்திற்கோர் கட்டிடமில்லாக் குறையும் தீர்ந்துவிடும். இறைவனின்னருள் அத்தகைய அன்பர்களையும் வள்ளல்களையும் கூட்டி வைத்தல் வேண்டும் என்பதே சமாஜத்தின் வேண்டுகோளாகும். 19-4-58-ல் புதிய நிர்வாக சபை அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்க ஒரு பொதுக்கூட்டம் கூடிற்று.

2-10-58-ல் திருப்போரூரில் முருகன் செந்தமிழ்க்கழகம் ஒன்று மயிலம் - ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலைய சுவாமிகளால் துவக்கப்பட்டு, ஒவ்வொரு கிருத்திகை முதலிய விசேஷ

தினங்களில் சமாஜ அங்கத்தினர் ஒருவர் சென்று சமயச் சொற்பொழிவாற்ற ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

விழாக்கூட்டங்கள் இவ்வாண்டு ஆறு நடைபெற்றன. அப்பர் திருநட்சத்திரம் 12–5–58-ல், திருஞானசம்பந்தர் திருநட்சத்திரம் 1–6–58-ல், மாணிக்கவாசகர் திருநட்சத்திரம் 22–6–58-ல், சுந்தரர் திருநட்சத்திரம் 24–7–58-ல் திருவான்மியூர் மருந்திஸ்வரர் கோயிலில் கொண்டாடப்பட்டன. 17–10–58-ல் அருள்நந்திதேவ நாயனார் திருநட்சத்திரத்தை முன்னிட்டுத் தருமபுர ஆதீனத் தேவாலய மடலாயப் பிரசார நிலையம் தியாகராய நகரில் சமாஜத் தலைவரவர்கள் விரும்பியபடி சிவஞானசித்தியார் சுபக்கம் முழுதும் படனம் செய்யப்பட்டு, திரு. க. வச்சிரவேல் முதலியாரவர்களால் விளக்கம் கூறப்பட்டது. காலை 9 மணி முதல் மாலை 4-30 மணி வரை அவ்விழாக் கொண்டாடப்பட்டது. 10–11–58-ல் மெய்கண்டதேவநாயனார் திருநட்சத்திரம் திருமயிலைக் கபாலீச்சரத்தில் கொண்டாடப்பட்டது. அதுசமயம் சிவஞானபோதம் படனம் செய்யப்பட்டது. அக்கூட்டத்தில் சிவஞானபோத மூலமும் ஒரு சிறு உரையும் கையடக்கப் புத்தகமாக வெளியிடவேண்டும் என்று விரும்பப்பட்டது. அதற்கு மயிலையில் வதியும் திரு. ம. சி. சம்பந்த முதலியார் அவர்கள் பொருளுதவி தந்துள்ளார்கள்.

(4) மாநாடுகளும் ஆண்டு விழாவும்

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 52-ம் ஆண்டு நிறைவு விழாவையொட்டிச் சைவர், சைவமங்கையர், சைவஇளைஞர் மாநாடுகள் சென்னை மயிலாப்பூரில் 1957-ல் டிசம்பர் 27, 28, 29 நாட்களில் சாய் கான சபாமண்டபத்தில் நடைபெற்றன. அறநிலையப் பாதுகாப்பு மந்திரியார் - உயர்திரு. ம. பக்தவத்சல முதலியாரவர்கள் திருமயிலைக் கபாலீச்சரத்தில் மகாநாட்டைத் துவக்கிவைத்தார்கள். சைவர் மாநாட்டிற்கு மயிலைகிழார் திரு. ம. பாலசுப்ரமணியமுதலியார், பி.ஏ., பி. எல். அவர்கள் தலைமைவகித்தார்கள். சைவ இளைஞர் மகாநாட்டைத் திரு. மணலி. இராமகிருஷ்ண முதலியார், பி. ஏ. அவர்கள் திறந்து வைத்தனர். திரு. ச.

சிவகுமாரன், எம். ஏ. அவர்கள் தலைமைவகித்தார்கள். சைவ மங்கையர் மாநாட்டைத் திறந்து வைத்துத் தலைமைவகித்தவர் திருமதி சரோஜினி வரதப்பன் அம்மையார் அவர்கள்.

அம்மாநாட்டை நடத்தித் தந்த நமது சமாஜ உதவித் தலைவர் திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம். ஏ. அவர்களுக்கும், திரு. எம். சம்பந்த முதலியார் அவர்களுக்கும், பொருளுதவிபுரிந்த ஏனைய பெருமக்களுக்கும், மாநாட்டிற்கு வந்தவர்களுக்குச் சிற்றுண்டி வசதி அளித்த திரு. மாணிக்கஞ் செட்டியாரவர்களுக்கும், திருமயிலைக் கபாலீச்சர ஆலய தர்மகர்த்தர்களுக்கும் சமாஜம் நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறது.

(5) சமய அறிவு வளர்ச்சித் தேர்வுகள்

நமது சமாஜம் நடத்தும் சைவப்புலவர் இளஞ்சைவப் புலவர் தேர்வுகள் 1934-ம் ஆண்டு முதல் நடத்தப்பட்டு வருகின்றன. இத்தேர்வுகளை நடத்துவதன்நோக்கம் சைவஇளைஞர்களுக்குச் சாத்திரஞானப் பயிற்சியுண்டாக்குவதேயாம். கலாசாலைகளிலுள்ள தமிழாசிரியர்கள் சிறிது ஊக்கத்தோடு மாணவர்கட்கு ஓய்வுநேரங்களில் இத்தேர்வுக்குரிய பாடங்களைக் கற்பித்து உபகரிப்பார்களாயின் நூற்றுக்கணக்கான மாணவர்கள் பெரும் பயனடைவார்கள். மற்றும் சிவாலயங்களில் உத்தியோகம் வகிக்கும் நிர்வாகஸ்தர்களுக்குப் போதிய சாத்திரஞானம் இன்றியமையாதது. அவர்கள் இத்தேர்வுகளில் கலந்துகொண்டு பயிலவேண்டுமென்று இந்துசமய அறநிலையப் பாதுகாப்புத் துறையாளர் ஓர் உத்தரவு விடுத்தால் நலமாக இருக்கும். இவ்வாண்டு நடத்திய தேர்வுகளில் தேர்ச்சிபெற்றவர்கள் மூவர். சைவப்புலவர் தேர்வில் இரண்டாம் வகுப்பில் தேறியவர் திரு. தங்கம்மா அப்பாகுட்டி, இலங்கை; மூன்றாம் வகுப்பில் தேறியவர் ஆ. பாலகிருஷ்ணன், இலங்கை; இவருடைய ஆர்வம் போற்றத்தக்கதென இங்குக் குறிப்பிடப் படுகிறது. இவர் இருக்கும் ஈழத்திலிருந்து இத்தேர்வு நடந்த விவேகானந்த சபை, கொழும்பு, 250 மைல் தூரமுள்ளது. ரயில்சத்தம் ரூ. 35 ஆயிற்றென்று அவர்கள் எழுதியுள்ளார்கள். எப்படியாவது இத்தேர்வில் கலந்துகொண்டு பட்டம்

பெறவேண்டுமென்ற ஆர்வத்துடன் இடத்தூரத்தையும் பணச் செலவையும் பொருட்படுத்தாது தேர்வில் கலந்து வெற்றி யடைந்த திரு. ஆ. பாலகிருஷ்ணன் அவர்களுடைய ஆர்வம் போற்றத் தக்கதேயாம். இளஞ்சைவப் புலவர் தேர்வில் தேர்ச்சிபெற்றவர் திரு. தேமொழி அவர்கள். (சென்னை, சைதாப்பேட்டை) இரண்டாம் வகுப்பில் தேறினர். வரும் ஆண்டுகளில் இதில் இன்னும் அநேகர் தேர்ச்சிபெற ஊக்கம் கொள்ளும்படி பல இடங்களில் தேர்வு நிலையங்களை அமைக்கச் சமாஜம் ஆவன செய்ய அங்கத்தினர்களுடைய ஒத்துழைப்பு இன்றியமையாதது ஆகும்.

(6) வார வழிபாடு

சமாஜ உபதலைவராயுள்ள திருவாளர் S. சச்சிதானந்தம் பிள்ளை அவர்களின் முயற்சியாலும் ஊக்கத்தாலும் திருமயிலைக் கபாலீச்சரத்தில் திங்கள்தோறும் வார வழிபாடு நடந்து வருகிறது. அவ்வழிபாட்டில் சமயச் சொற்பொழிவாற்றி வருபவர் சமாஜக் காரியதரிசி திருவாளர் மா. ப. தியாகராஜ முதலியார் அவர்கள். இவ்வார வழிபாட்டின் நோக்கம் ஆலய வழிபாட்டின் தத்துவங்களைத் தெரியப்படுத்தலும், வழிபடும் வகைகளில் பயிற்சி அளித்தலுமாம். இரண்டு ஆண்டுகளாக இது நடத்தப்பட்டு வருகின்றது. அப்படிப் பட்ட வார வழிபாடுகள் ஆலயங்கள்தோறும் மடங்கள் தோறும் நடத்தப்படவேண்டுமென்று இந்துமத தர்ம பரிபாலன ஆணையாளர் திரு. உத்தண்டராமபிள்ளை அவர்கள் அறிக்கை அனுப்பியுள்ளார்கள் என்பதை அறிந்து சமாஜம் பாராட்டுகிறது.

(7) வெளியீடுகள்

ஞானியார் சொற்பொழிவுகள் சிலவற்றைத் தொகுத்து நினைவு மலராக வெளியிடுவதற்குச் சில வருடங்களுக்கு முன் அன்பர்கள் பொருளுதவி செய்துள்ளார்கள். அதன் மொத்தத் தொகை சுமார் ரூ. 800. இவ்வாண்டு அதற்காகப் பல கட்டுரைகளைச் சேர்த்தும் எழுதுவித்தும் நினைவு மலரை வெளியிடுவதற்கு வேண்டிய முயற்சிகள் தீவிரமாகச் செய்யப்

பட்டு, இம் மகாநாட்டில் அதை வெளியிட முடிந்ததற்கு இறைவன் இன்னருளை உன்னி மகிழ்கின்றோம். இந்நூலைப் பதிப்பிக்கச் சமாஜ 'சித்தாந்தம்' பத்திராசிரியர் - புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.அவர்கள் எடுத்துக்கொண்ட உழைப்பிற்குச் சமாஜம் நன்றி பாராட்டுகிறது. இந்நூல் அழகிய முறையில் வெளியிடப்பட்டிருக்கிறது. தமிழுலகம் இதை ஏற்றுப் பயனடையும். இதுவே நம்மனோர் ஞானசூரியனாய் விளங்கிய ஞானியார் சுவாமிகளுக்குச் செலுத்தும் அஞ்சலியாகும்.

(8) துண்டுப் பிரசுரங்கள்

திருமயிலைப் பெருவிழாப் புண்ணியகாலத்தில் அறுபத்து மூவர் தினத்தில் சென்ற ஆண்டு, காலஞ்சென்ற திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள் எழுதி அச்சிட்டிருந்த அறுபத்துமூவர் சரித்திரக் குறிப்புக்கள் அடங்கிய சிறிய பிரசுரம் 1000 பிரதிகள் இலவசமாக வழங்கப்பட்டது. மாணிக்கவாசகர் சரித்திரமும், சுந்தரர் சரித்திரமும் அவர்களுடைய திருநக்ஷத்திர விழா அறிக்கைகளில் அச்சிட்டு வழங்கப்பட்டன. "அறுபத்து மூவர்" அச்சிட்டு இலவசமாக வழங்கப் பொருளுதவி புரிந்த திருவாளர் மணலி இராமகிருஷ்ண முதலியார், பி. ஏ. அவர்களுக்கும், ஹிந்து தர்மப் பிரசார நிலையக் காரியதரிசி திருவாளர் S. சச்சிதானந்தம் பிள்ளை அவர்களுக்கும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

(9) பொருள்நிலை

53-வது ஆண்டு (1–12–1957 முதல் 30–11–58 வரை) வரவு செலவுக் கணக்கிலிருந்து எடுக்கப்பட்ட தொகுப்பேடு இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. ஆண்டின் இறுதியில் இந்தியன் பாங்கியில் இருப்பு ரூ. 1339·23. செயலாளர் கையிருப்பு ரூ. 20·32. கைவசமுள்ள புத்தகங்களின் விலை பெறுமானம் ரூ. 4064·80. பொருள்நிலை மிகவும் வருந்தத்தக்கதாயிருப்பதைச் சைவ அன்பர்கள் கவனித்துக் குறைவற

ஆதரவு தரவேண்டுமென்று பெரிதும் மன்றாடி வேண்டு கிறோம்.

**(10) விண்ணப்பம்**

மேலே காட்டியுள்ள பொருள் நிலையையும் சமாஜம் செய்து வரும் பணியையும் நோக்குமிடத்துச் சமாஜ அங்கத் தினர்களுக்குத் தாங்கள் செய்யவேண்டிய முயற்சிகள் என்னவென்பது சொல்லாமலே விளங்கும். அவைகளுள் முக்கியமானது அங்கத்தினர்களுடைய எண்ணிக்கையை ஆயிரத்துக்கு மேற்படச் செய்ய வேண்டுமென்பது. ஜில்லாப் பிரதிநிதிகளும் சைவப்பெருமக்களும் இந்தப் பணியில் ஈடுபட்டு ஆவன செய்யுமாறு வேண்டப்படுகிறது. சைவ சித் தாந்த மகா சமாஜம் தொடங்கி இற்றைக்கு 53 ஆண்டுகளாகி யும் தனக்கென ஒரு கட்டடமின்றியிருத்தல் மிக வருந்தத் தக்க நிலையாகும். இக்குறைபாடு நீங்க வேண்டுமென்று ஒவ் வொரு மாநாட்டிலும் அங்கத்தினர்கள் கூக்குரலிட்டிருக்கின் றனர். அக்குரல் சைவப்பெருமக்கள் சிலரை ஊக்குவித்தால் இக்குறைபாடு நீங்கிவிடும். சைவசமயம் மேலான சமயமென எடுத்துக்காட்ட வேண்டுவதில்லை. அப்படிப்பட்ட சமயத்தை வளர்க்க ஒரு சமாஜம் வேண்டுமென்பதும் வெளிப்படை. சைவப் பெருமக்களின் எண்ணிக்கையும் குறைந்ததன்று. போகமும், திருவும் புணர்ப்பிப்பானை வணங்கும் சைவநெறி நிற்போர்க்குச் செல்வமும் நிறைந்துள்ளது. இருந்தும் இச் சைவ சித்தாந்த மகா சமாஜத்திற்கு இடவசதியில்லை யென்பதைக் கேட்கப் பிறருக்கு வியப்பையும் நமக்கு வருத் தத்தையும்தான் உண்டுபண்ணுகிறது. பெருமக்கள் பலர் இம்முயற்சியில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டுமென்பதே சமாஜத்தின் முக்கிய வேண்டுகோளாகும். நன்கொடை தர விரும்புவோர்கள் செயலாளருக்கு அறிவிக்கும்படி கோரு கிறோம்.

**(11) பிரிவாற்றாமை**

இத்தகைய நெருக்கடிகளுக்கிடையில் கடந்த பல ஆண்டு களாக இச்சமாஜத்தை வளர்த்துத் தந்த திருவாளர் ம. பால

சுப்பிரமணிய முதலியாரவர்கள் இன்று நம்மிடையில் இல்லாமைக்கு வருந்த வேண்டியவர்களாக இருக்கிறோம். சமாஜ மாநாடுகளுக்கு அவர் உயிர்நாடியாய் இருந்தார்கள். அவர்களை இழந்தோம். அவர் இல்லாமை இந்த மாநாட்டுக்குப் பெருங் குறையாக இருக்கிறது. அவர் ஆவி சாந்தியடையச் சமாஜம் பிரார்த்திக்கிறது.

(12) நன்றி

கட்டிட வசதியில்லாக் குறையினால் நிர்வாகசபைக் கூட்டங்கள், சமாஜக் கூட்டங்கள் முதலியன இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்ரமணிய பக்தஜன சபையில் நடத்தப்பட்டு வருகின்றன. அவற்றிற்கு இடந்தந்துதவும் சபையினர்க்குச் சமாஜம் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டுள்ளது. சென்னை ஹிந்து சமய அறநிலையப் பாதுகாப்பாளர் திருவாளர் A. உத்தண்டராம பிள்ளை அவர்கள், ஆண்டு ஒன்றுக்குப் பத்தாயிரம் ரூபாய் வருமானமுள்ள கோயில்கள் "சித்தாந்தம்" இதழை வாங்கலாமென்று சென்ற ஆண்டு அறிக்கை விடுத்ததோடு இவ்வாண்டு நமது சமாஜ நூல்களைக் கோயில்களிலுள்ள நூல்நிலையங்களுக்கு வாங்கலாமென்று அனுமதிதந்து உதவியிருப்பதைச் சமாஜம் பாராட்டி அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. புதிய அங்கத்தினர்களை இவ்வாண்டு சேர்த்துதவிய சைவப் பெருமக்களுக்கும், "சித்தாந்தம்" இதழைக் காலம்தாழ்த்தாது அச்சிட்டுத் தரும் சாது அச்சகத்தினர்க்கும், விழாக்களில் சொற்பொழிவாற்றிய அறிஞர்களுக்கும், சைவப் பணியை யேற்று நிர்வகிக்கும் சைவத் தொண்டர்களுக்கும், சைவர்கள் யாவருக்கும் எமது நன்றி உரித்தாகுக.

செயற்குழுவினர் அநுமதிப்படி,

இப்படிக்கு,

சென்னை, 21-12-58 } மா. ப. தியாகராஜன், பி. ஏ.,
செயலாளர்

## சைவ சித்தாந்த மகா சமாஜ 53-ம் ஆண்டு வரவு செலவுக் கணக்கு

[1-12-57 முதல் 30-11-58 வரை]

| வரவு | | | செலவு | | |
|---|---|---|---|---|---|
| ஆரம்பக் கையிருப்பு | 10 | 50 | சித்தாந்தம் அச்சுக்கூலி முதலியன | 1125 | 93 |
| சாதாரண சந்தா | 1248 | 00 | போக்கு வரவு செலவு | 62 | 79 |
| தேர்வுக் கட்டணம் | 7 | 00 | பாங்கியில் கட்டியது | 965 | 11 |
| புத்தக விற்பனை | 296 | 33 | பொன்விழா மலருக்கு வாங்கியதைத் திருப்பிக்கொடுத்தது | 250 | 00 |
| நன்கொடை | 887 | 00 | காகிதம் முதலியன வாங்கியது | 1012 | 15 |
| பாங்கி வட்டி | 54 | 18 | தபால் கூலி | 508 | 73 |
| பாங்கில் வாங்கியது | 1925 | 19 | விழாச் செலவுகள் | 618 | 80 |
| வி. பி. தபால் வரவு | 135 | 63 | காரியதரிசியிடம் கையிருப்பு | 20 | 32 |
| | 4563 | 83 | | 4563 | 83 |

சமாஜப் பொருள் வலிவு : இந்தியன் பாங்கில் இவ்வாண்டு முடிவிலிருப்பது ரூ. 1339 23

மாஜி பொக்கிஷதாரர் திரு. T. K. சுந்தரம் பிள்ளை அவர்களிடமிருந்து வரவேண்டியது ரூ. 414 75

கையிருப்புப் புத்தகங்களின் (விற்பனை விலை) மதிப்பு ரூ. 4064 80

புத்தக விற்பனைமூலம் பாக்கி வரவேண்டியது ரூ. 169 75

S. திருநாவுக்கரசு, ஆண்டுப் பரிசோதகர்.
M. சிவராமன், மாதப் பரிசோதகர்.
C. N. சிங்காரவேலு முதலியார், பொருளாளர்.
M. P. தியாகராஜன், செயலாளர்.

உ

# ஆசிமொழி*

### காப்பு

கல்லால் நிழல்மலை வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர் நல்லார் புனைவரே.

### இட்டலிங்கப் பெருமான்

கட்டழ கமைந்து காளையம் பருவம்
    கடந்திடா துள்வலி யுடைத்துக்
கலங்கல்செய் பிணியின் றியன்றயாக் கையராய்க்
    கல்வியங் கடல்கடந் தவராய்
நட்டவர் விரும்பு மாறுநீ செய்ய
    நடக்குநாள் உடல்வெறுத் துனையே
நம்பியா ரூரன் முதலியோர் நண்ண
    நானுடல் விடுமென வழிவேன்
பட்டிருள் விழுங்க வலர்கதி ரவனும்
    பனிமதி யோடுயிர்த் தொகையும்
பார்புனல் சுடுதீ வளிவிசும் பென்னப்
    பட்டவைம் பூதமும் ஆகும்
எட்டுரு வடைந்தும் உருவமொன் றின்றி
    யிற்றென வுணர்வரும் பொருளே
இட்டநன் குதவி யென்கரத் திருக்கும்
    ஈசனே மாசிலா மணியே.

### ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்

அருந்தும் அமுதின் இனியதாய் அன்போ டளைந்து படிறிலதாய்
    அறைந்த மொழிதத் துவமசியின் அன்றி மாறு வியல்பினதாய்ப்
பொருந்தும் மறையாம் உடம்பிற்குப் புக்க வுயிராய்ப் பவக்கடற்குப்
    புணையாய்க் கயிலை வழித்துணையாய்ப் பொலிந்த திருவஞ்
[செழுத்தென்னும்

---

*ஸ்ரீமத் ஞான ராஜதானியான பொம்மய பாளையம் பெரியமடம் மயூராசல நிவாச யதீச்சுர கர்த்தரான மயிலம் தேவஸ்தான ஆதீன பரம்பரைத் தர்மகர்த்திருத்துவம் பதினெட்டாம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் அவர்கள் 29-12-58 மயிலத்தில் நிகழ்த்தியது.

பரந்த புகழ்மந் திரவேந்து பவனிபோதுந் திருமருகாய்ப்
பனிவெண் திங்கட் சடைமுடியோன் படிவம் உணர்த்தும் விளக்
திருந்து பவளத் திருவாயாற் செல்வா முத்தம் தருகவே [காகித்
திளைக்கும் கருணைச் சிவஞான தேவா முத்தம் தருகவே.

**மெய்கண்ட தேவநாயனர்**

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைகள் எல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணை மேவும்
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

**சைவப் பேரன்பர்களே ! செந்தமிழ்ச் செல்வர்களே !**

இறைவனது பரங்கருணையை உலகிற்கு உணர்த்தி உய்யும் வழியில் உலகத்தைச் செலுத்த விரும்பும் பேரன்புடைய பெரியோர்கள் பலரது முயற்சியால் இப்பெரிய விழா இனிது நிறைவேறியது. இந்த நற்பொழுதில் நாம் சிந்திக்கவேண்டிய செய்திகள் பல உள.

**சமயம் எது ?**

இன்பம் வேண்டும் என்று விரும்பாதவர் உலகில் இல்லை. எல்லோரும் இன்பத்தை நாடியே வாழ்கின்றனர். ஆயினும் இன்பமல்லாததை இன்பம் என நினைத்துச் செல்கிறவர்களே உலகத்துப் பலர். எனவே இன்பம் இன்பம் என்று பலர் நினைப்பதெல்லாம் இன்பப் போர்வையில் மறைந்த துன்பம் என்றே சொல்லலாம். இந்நிலையில் ‘ உண்மையான இன்பம் எது ’ என்பதை அறிந்து கொள்ளவும், பிறர்க்கு அறிவித்துப் பயன்பெறச் செய்யவும், பல பெரியார்கள் முயன்றனர். அம் முயற்சியின் விளைவே சமயம் என உருப்பெற்றது.

சமயநெறி, மக்கள் தமது வாழ்வை ஆராய்ந்து நல்லனவற்றைக் கொள்ளவும், தீயனவற்றைத் தள்ளவும் உதவுகிறது.

### சமயத் தோற்றம்

சமய நெறியின் முதற்படியே கடவுள் ஒருவர் உண்டு என்னும் உணர்ச்சியாகும். பல்வகைப்பட்ட அளவை களால் ஆராய்ந்து பார்த்தாலும் உலகிற்கும் நமக்கும் முதல்வனுகிய இறைவன் ஒருவன் உளன் என்பது தேற்ற மாகும். இப் பரம்பொருள் உணர்ச்சி 'இப்பொழுது தோன்றியது' என்று யாராலும் சொல்ல இயலாது. அறிவு நிலையில் சிறிது வளர்ந்த மனிதப் பிறவி என்று தோன்றிற்ருே அன்றே கடவுள் உணர்ச்சியும் தோன்றி யிருக்க வேண்டும். நாம் அறிந்த தமிழ் நூல்களில் மிகப் பழைய நூல்களில் கடவுளைப்பற்றிப் பேசப்பட்டிருப்பதைப் பார்க்கலாம்.

கடவுள் ஒருவர் உண்டு என்னும் எண்ணம் எழுகிற பொழுதே நம்மைப் பற்றிய உணர்வும் தோன்றுகிறது. நமக்கும் அவர்க்கும் உள்ள ஏற்றத் தாழ்வுகளும் புலனு கின்றன. அவற்றையெல்லாம் உணர உணர நமக்கு இவ் வுலக வாழ்க்கையின் வேருக மற்ருெரு வாழ்க்கை இருக் கிறது என்பது நினைவுக்கு வருகிறது. சுருங்கக் கூறின் புறவாழ்க்கை, அகவாழ்க்கை என்ற இரண்டு வாழ்க்கை நமக்கு உண்டு. உடலுக்காக வாழும் வாழ்க்கை, உயிருக்காக வாழும் வாழ்க்கை என்றும் கூறலாம்.

### சமயமும் சமூகமும்

உயிர் இல்லாத உடலுக்குச் சமூகத்தில் மதிப்பில்லை. உயிர் இருக்கும் வரையில் பொன்னும் மணியும் அணிந்து அழகுபடப் பல்லோர் நடுவே விளங்கிய உடலை உயிர்போய் விட்டால் ஊருக்கு வெளியே புதைத்தோ எரித்தோ விடுகிருேம். தனியுடலுக்கு வாழ்வில்லை. ஆனல் உயிரோ இந்த உடலை விட்டபிறகும்கூட வேருெரு உடலை எடுத்துக் கொள்ளுகிறது. தனியுயிருக்கு வாழ்க்கை மேலும் தொடர் கிறது. உடலுக்காக உயிர் வாழ்வதானல் உடல் இறுதி வரை அழியாமல் அது பார்த்துக்கொள்ள வேண்டும். அவ்வாறில்லாமல் உடலை அழியச் செய்து உயிர் பிரிந்து விடுவதால் உடலுக்காக உயிர் இல்லை என்பது உறுதி. எனவே, உயிருக்காகவே உடல் பெற்றிருக்கிருேம் என்ற கொள்கையே நிலைத்து நிற்பதாம். ஆகவே இந்த உடலைக்

கொண்டு உயிருக்கு என்ன நலம் தேடினேம் என்று எண்ணிப் பார்த்தால், நாம் தேடிய எல்லாம் உடலைச் சார்ந்தனவாய் உடலை வளர்க்கவும் தேய்க்கவும் காரண மாய் விடுகின்றன. ஆனால் தெய்வ வழிபாடும் தெய்வ சிந்தனையும், சமய ஆராய்ச்சியுமே உடலோடு தொடர்பில் லாமல் மிகுந்து நிற்கின்றன. அவையே உயிரை வாழ்விப்பன என்பது கூறாமல் விளங்கும்.

உடலை வாழ்விக்கும் வாழ்வில் போட்டியும் பொறாமை யும் உண்டு. எப்படியாவது உடலை வளமுறுத்த வேண்டும் என்ற எண்ணம் தலையெடுத்து விடுமானால் அதனால் விளையும் கேடுகள் சொல்லுதற்கரியன. உயிர் நலம் தேடும் சமய வாழ்வ கடந்து உடல்வளம் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டு வாழும் விலங்கு வாழ்வு வளருமானால் என்ன நேரும்?

சமய வாழ்வு மலர்ந்தபொழுது நிகழ்ந்த நன்மையைச் சொல்லும் பாடலிலே, தவத்திரு சிவப்பிரகாச அடிகளார் சமய வாழ்வு மலராவிட்டால் என்ன நேரும் என்பதை நம் மனக் கண்ணிற்குக்கொண்டு வருகிறார். அப்பாடலைக் கீழே காண்போம்:

கொலைகள வழுக்கா றவாவொடு வெகுளி
கொடுஞ்சொல்பொய் பயனில கூறல்
நிலையழீஇ ஒருவன் செய்நன்றி மறத்தல்
நிந்தனை வஞ்சனை பிறர்தம்
சிலைநுதல் மடவார்க் கருதல்என் றினைய
தீமைகள் யாவும்போ யினவால்
நலமலி தரும மூர்த்தியா கியநம்
நந்திவா னவன்புவி வருநாள்.

மக்களது சாதாரண சமூக வாழ்விற்கே கொலை, களவு முதலாயின கேடு பயப்பன என்று கூறவேண்டிய தில்லை. சமுதாய வாழ்வு நல்ல முறையிலே வளர வேண்டுமானால் சமயவுணர்வை மக்களிடையே நல்ல முறையில் வளர்க்க வேண்டும்.

**சமயமும் அரசியலும்**

சமுதாய நலத்தினைப் போற்றும் அரசியல் சமய நலத் தைப் போற்ற வேண்டும் என்பது மேற்கூறியவற்றால்

விளங்கும். பசுவின் மடியிலிருந்து பாலைப் பெற்றாலும் அதன் வயிற்றையும் மற்ற உறுப்புக்களையும் பாதுகாப்பது போல, சமுதாயத்தின் வருவாயாலும் கட்டுப்பாட்டாலும் அரசியல் நடைபெற்றாலும் சமுதாய ஒழுக்கம் கெட்டுவிடுமானால் கட்டுப்பாடும், வருவாயும் கூடக் குன்றிவிடும் அல்லவா? ஆகவே சமுதாய ஒழுக்கத்தைப் போற்றுகின்ற—மக்களது உள்ளத்தை வளர்க்கின்ற சமயத்தைப் போற்றி வளர்த்தல் அரசியலின் முதற் கடமையாகும்.

புத்தரது பஞ்சசீலமும், சமணர்களது தானம், சீலம், தவம், அறிவர் சிறப்பும், சைவசமயம் கூறும் :

" ஒழுக்கம் அன்புஅருள் ஆசாரம் உபசாரம் உறவு சீலம்
வழுக்கிலாத் தவம்தா னங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை
அழுக்கிலாத் துறவு அடக்கம் அறிவொடு அர்ச்சித்தல் ஆதி
இழுக்கிலா அறங்கள் "

கடவுள் நெறியில் மக்களை அழைத்துச் செல்வதோடு அன்றி, இம்மையில் மக்கள் ஒருவரை ஒருவர் அடித்துக்கொள்ளாமல் அமைதியும் இன்பமும் கலந்த நல்வாழ்வு நடத்தவும், அரசியல் நன்கு நடைபெறவும் உதவி செய்வனவன்றோ? இதனாலேயே நம் தமிழ்நாட்டுச் சேர சோழ பாண்டிய பல்லவப் பேரரசர்கள் வானளாவிய திருக்கோயில்களை எழுப்பித் தெய்வநெறியை வளர்த்தனர். தற்கால அரசியலிலும் அறநிலையத் திருக்கோயில்துறை வளர்ந்து வருவது வருங்கால உலகிற்கு ஓர் நல்ல அறிகுறியாகும்.

### சைவ சமயம்

சமயங்கள்தாம் பல. அவற்றுள்ளும் சைவசமயம் தொன்மையானது, உலகம் எங்கும் பரவியது, சிறந்தது என்பதனைப் பல அறிஞர்கள் எடுத்துரைத்தார்கள். சைவ சமயத்திற்குள்ள சிறப்பு மக்களில் மிகத்தாழ்ந்த நிலையில் உள்ளவர்களையும் இறைவனது திருவருளுக்கு அருகே அழைத்துச் செல்லும் அதன் ஏற்றமே யாகும்.

### அன்புநெறி

சைவசமயம் அன்பையே வற்புறுத்துகிறது. அன்பலா நெறியெல்லாம் துன்பநெறி என்று தள்ளுகிறது.

" அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே "

என்னும் திருமந்திரம் யாவரும் அறிந்ததே. அன்பு வளரு மானல் எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணும் தெய்வ அருட்கருணை அங்கே மலரும் என்பதைச் சொல்ல வேண்டுமா? எல்லா உயிரிடத்தும் அன்பை வளர்த்தால் விருப்பு வெறுப்பு என்கின்ற வேற்றுமை அங்கே தோன்ற இடம் எது? நம்பொருள்; பிறர் பொருள் என்ற எண்ணம் மெல்ல மெல்ல மறைகிறது.

ஒருமகன்; தனியன்; ஏதோ ஓர் ஊர்க்குச் செல்கிருன். அங்கே ஒரு பெண்ணைக் கண்டு மணம் புரிந்துகொள்கிருன். அப்பெண்ணைப் பெற்ருேரிடத்திலும், உற்ருேரிடத்திலும் அவள் காரணமாக அன்புசெலுத்துகிருன். முன்பு அவனுல் அன்பு செலுத்தப்படாதிருந்த பொருள்கள் எல்லாம் இப் பொழுது அவன் அன்புக்குரியனவாகி விட்டன. எல்லாப் பொருளும் தம்பொருள், தம்பொருள் எல்லார் பொருளும் என்ற உணர்ச்சி உண்டாகிவிடுகிறது. தன்னை மாத்திரம் பாதுகாத்துக் கொண்ட மகன் மனைவியையும் அவளது பெற்ருேரையும் பாதுகாக்கிருன். தொடர்பற்ற புதுப் பொருளிடத்தில் அன்பினுற் கொண்ட தொடர்பால் வேற் றுமை மறைந்து ஒற்றுமை விளைகிறது. இந்த அரிய கருத்தை ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் திருப்போரூர்ச் சந்நிதி முறையில்,

" ஒருபொரு ளிடத்தும் விழைவொடு வெகுளி
உறுதெலாம் சமமதாக் கண்டுன்
திருவடி நிழற்கீழ் அசைவற இருந்து
சிறியனேன் என்றிளைப் பறுவேன் "

என்று கூறியுள்ளார்கள். உயிர்களை யெல்லாம் ஒன்று படுத்தி உயர்நெறி யுய்க்கும் அன்பு சைவசமயத்தின் பெரு நெறியாய் இருப்பதொன்றே அதன் சிறப்பை விளக்கும்.

உருவ வழிபாடு

அன்பு செலுத்துவதற்கு ஒருபொருள் உலகத்தில் தேவைப்படுகிறது. தாய், தந்தை, மனைவி, மகன், உறவினர்,

நண்பர் என்று பலரிடத்திலும் செலுத்தப்படும் அன்பு மெல்ல மெல்ல விரிந்துகொண்டே போய் எல்லா உயிர்களிடத்தும் செலுத்தப்படும் அருளாகிறது. பின்னர் இப்படிப் பரந்துபட்ட உயிர்களிடத்துச் செலுத்தப்பட்ட அகண்டமான அன்பானது அவ்வகையில் ஒருமைப்பாடு அடைந்து இறையன்பாகத் தழைக்கிறது. இவ்விறையன்பு தழைக்கவே உருவத்திருமேனியை இறைவனுக்குச் சைவசமயம் அளித்துள்ளது.

நமது மனமும் பொறிகளும் உலகில் பழகியவை. அவைகளை ஒருமுகப்படுத்தல் என்பது எளிதில் இயல்வதன்று. ஆனல் ஒருமுகப்பட்டு விடினே அதனுற் பெறும்பயன் அளவிலது. ஐம்பொறிகளுக்கும் இன்பம் ஊட்டும் பொருள்களின் வழியிலே ஓடியோடிப் பழகிய மனத்தை 'அடங்கி இரு' என்று சொன்னல் அது அடங்குவதில்லை. அதனல் இறைவனுக்கு உருவத் திருமேனி அளித்து, அணி, பூ, புகை, சாந்தம், விளக்கு, நைவேத்தியம், இன்னிசைமுதலிய வழிபாட்டு நெறிகளையும் அமைத்தார்கள். ஐம்பொறிகளுக்கும் உரியதேவைகளை இறைவனைச் சுற்றி அமைத்து விட்டு மனத்தை நோக்கி 'இப்பொழுது நீ எங்கு வேண்டுமானுலும் போகலாம்' என்ருல் அது 'நான் இங்கேயே கிடக்கிறேன்' என்று சொல்கிறது. இவ்வகையிலே உருவத்திருமேனி கொண்டு செய்யும் இறைவழிபாட்டில் கட்டுப்பாடாகப் பழகிவிட்ட மனம், பிறகு பிறநெறிகளில் சென்ருலும் அகத்தால் பழைய நெறியிலேயே ஒன்றியிருக்கும்.

சைவம் மாறிச் சமணம் புக்குத் திருவருளால் மீண்டும் சைவத்திற்கு எழுந்தருளிய அப்பரடிகள் தமது முதற் பதிகத்தில்,

"நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்
நினையா தொருபோதும் இருந்தறியேன்"

"சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்"

என்றதும் இக்கருத்தையே விளக்கி நிற்றல் காண்க.

உலகெலாமாகி உள்ள இறைவனைத் தியானிப்பதற்கு ஓர் உருவத் திருமேனி இன்றியமையாதது என்பது நமது மன இயல்புக்கு ஒத்ததாகல் அறிக. அவ்வாறே உருவத் திருமேனியிற் கண்டு வழிபடுங்காலத்தும் அவ்விறைவனை

உலகெலாம் ஆகி விளங்குகின்முன் என்ற உண்மையையும் உணர்தல் வேண்டும்.

" திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கே
உருக்கோலி மந்திரத்தா லேகினையும் அவர்க்கும்
உளன்எங்கும் இலன்இங்கும் உளன்என் பார்க்கும்
விருப்பாய வடிவாகி இந்தனத்தின் எரிபோல்
மந்திரத்தில் வந்துதித்து மிகும்சுரபிக் கெங்கும்
உருக்காண ஒண்ணுத பால்முலைப் பால்விம்மி
ஒழுகுவது போல்வெளிப்பட் டருளுவன் அன்பர்க்கே "

என்னும் சிவஞானசித்தியார் பாடல் நாம் ஓர்தற் குரியது.

நமது பொறிகள் புலன்களின் வழியில் புறத்தே அலைந்துதிரிந்து ஒன்ருதபொழுது அப்பொறிகளிலே கடவுள் தோன்ருர். புலனே தோன்றும். ஆனல் விடயங்களிலே செல்லுகிற பொறிகளை அடியோடு கெடுக்காது அவ்வப் புலன்களிலேயே விடவேண்டும். புலனுக்குப் புலனுகும் பொருளை மட்டும் உலகப்பொருளாக்காது இறைவனுக ஆக்கிவிட்டால், மனம் ஒரு பொருளிடத்தில் ஐம்புலனுலும் என்றும் நிலைபெறும்.

" சிந்தனைநின் தனக்காக்கி நாயி னேன்தன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கியைம் புலன்கள் ஆர
வந்தெனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங் கடலே "

என்னும் திருவாசகப் பகுதியை ஈண்டுக் கருதுக.

புறத்தே யுள்ள விடயங்களிற் செல்லாது உருவத் திருமேனியில் ஒன்றி இறையுணர்வு கொண்ட மனத்தின் கண் சிவமே தோன்றும். சிவம் தோன்றின் உலகம் தோன்ருது. அங்ஙனம் ஒன்றியிருந்து நினைவதால் விளைவது பேரின்பமே யன்றி வேறில்லை. தவத்திரு சிவப்பிரகாச

அடிகள் உருவவழிபாடு மெல்ல மெல்ல உணர்வை ஒடுக்கிப் பேரின்பமயம் ஆக்குவதைப் பிரபுலிங்க லீலையில்,

"பொறியின் புறத்து மனம்செல்லின் புலனே தோன்றி யிடும்அகத்திற்
செறியக் காணம் பரானந்த சிவமே தோன்றும் சிவந்தோன்ற
அறிவிற் பரந்த விடயமயம் ஆகும் உலகம் தோன்றாமல்
பிறவித் துயாக் கடல்கடந்து பேரின்பம் சார்குவான்றே."

என அழகுறக் கூறியுள்ளார்.

புறத்தே உருவம் கொண்டு செய்யப்படும் வழிபாடு, பின்னர் அகத்தே செய்யும் வழிபாடு ஆகிறது. அதனை அருவுருவ வழிபாடு என்றும் கூறலாம். மனத்துக்குப் புலனுவதால் உருவம் என்றும், பொறிகளுக்குப் புலனாதல் இன்மையின் அருவம் என்றும் கூறலாம். அவ்வக வழிபாட்டையும் கடந்த நிலை தான் – அவன் என்னும் வேற்றுமையின்றி ஒன்றிய அருவ வழிபாடு என்று கூறலாம்.

சித்தாந்த சிகாமணியில் இட்டலிங்கமாகிய புறவுருவ வழி பாட்டுக்கும் மேலாக, மற்றும் இரண்டு இலிங்க வழிபாடு கள் வீரசைவர்க்குக் கூறப்படுவதும் காண்க.

" ஊனமாம் விடயம் நீத்தே உளம்தடு மாறல் இல்லா
மானமா யோகிகட்கு மனத்தெழுந் திலங்கா நின்ற
ஞானமா இலிங்கத் தன்றி நவின்றுள புறத்தில் என்றும்
தானுரு தளவிருப்பென் றுணருதி தவத்தின் மேலோய் "

என்பன காண்க.

" சச்சிதானந்த மாகும் தற்பர லிங்கம் தன்னை
இச்சையால் அறிஞனுனேன்...இதயத்தில் தியானம்செய்க "

" திறம்பெறும் இலிங்கம்மூன்று திறத்ததால் தூல லிங்கம்
பரம்பெறும் சூக்கு மம்பின் பராற்பரம் என்னத் தூலங்
காம்பெறும் இட்ட லிங்கம் கருத்தது சூக்கு மம்தான்
நிரம்புறும் இலிங்கந் தானே நிகழ்பராற் பரம்என் றோர்வாய் "

ஆகவே நிர்க்குண வழிபாடு சிறந்ததாயினும் அதற்கு மூலமாய் அதனை விளைவிக்க வல்லதாய் நிற்பது சகுண வழிபாடு. நிர்க்குணனும் இறைவனை நேருங்தவ தைவிடச் சகுண

னுய் நெருங்ுவது மிக எளிதில் இயல்கிறது. இவ்வுருவ வழிபாடு பரிபக்குவமில்லாத எளிய மக்களும் இறைவனை அணுகு தற்குக் கிடைத்த வரப்பிரசாதம் என்று கூறலாம். இதனலேயே நமது பெரியோர்கள்,

‘ விளக்கினர் பெற்றஇன்பம் மெழுக்கினுற் பதிற்றி யாகும்
துளக்கின் நன்மலர் தொடுத்தால் தூயவிண் ணேற லாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞான மாகும்
அளப்பில கீதஞ் சொன்னூர்க் கடிகள்தாம் அருளு மாறே ’’

என்றும்,

“ நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி யென்றும்
ஆரூரா என்றென்றே அலறு நில்லே ’’

என்றும்,

“ கண்டிகைக் கலனே கலனென வணிந்து
காயமேல் அணிந்த வெண்ணீற்றுப்
புண்டரக் குறிசேர் நுதலொடு கினையான்
பூசனை புரியுமா றுளதோ ’’

என்றும் இந்நெறியைப் போற்றுவாராயினர். மக்களுக் கெல்லாம் எல்லா வகையிலும் உய்திநெறி யூட்டும் உருவ வழிபாடு சைவ சமயத்தில் விரிவாக அமைந்திருப்பது இச்சமயத்தின் தனிச்சிறப்பாகும்.

சைவப் பெரியார்கள்

அவ் உருவ வழிபாட்டினை மேற்கொண்டு வாழ்ந்த சைவப் பெரியார்கள் அறுபத்து மூவரைப் பற்றிப் பெரிய புராணம் என்னும் பெருநூல் நமக்கு எடுத்தியம்புகிறது.

இறைவனது பேரருள் எல்லோருக்கும் கிடைப்பது ஒன்றே. அது காட்டிலே சென்று தவம் செய்வார்க்குத்தான் கிடைக்கும் என்பதில்லை. உலகிடை வாழினும் 'நாம் அவன் உடைமை' என்னும் நினைவை நெஞ்சிற் கொண்டு, "எல்லாம் அவனுக் குரியனவே" என்னும் வகையில் வாழ்க்கையை நடத்தினால் இறைவனது பேரருள் நமக்குக் கிடைக்கும் என்ற சீரிய கருத்தினை, அப்பெரியார்களது வாழ்க்கை வரலாறுகள் நமக்குத் தெரிவிக்கின்றன. அப்பெரியார்களை வழிபட்டுப் பேறுபெற்ற பெரியார்களும் நமக்குப் பல உண்மைகளை அறிவிக்கின்றனர்.

### சிவ சின்னங்கள்

அப்பெரியார்களது வரலாறுகளிற் சிவசின்னங்களை உறுநெறியாகக் கொண்டு வழிபட்டுப் பேறு பெற்ற அடியார்கள் பலரைப் பார்க்கிறோம். காலந்தோறும் பல வேடம் கொண்டு செல்லும் மக்கள் கூட்டத்தை ஒரு திருநெறியில் செலுத்த ஒரு திருவேடம் அவசியமானது. அவ்வேடந் தானும் இறைவனை நினைப்பிக்கும் பொருள்களால் அமையின் இறையுணர்வு சாலச் சிறக்கும். அச் சிவ சின்னங்களே திருநீறும் உருத்திராக்கமும். உலக நிலையின்மையையும், நிலைத்து நிற்பவன் இறைவன் ஒருவனே என்பதையும், அவன் பன்முகமாய்ப் பரந்து விளங்கினும் ஒன்றாய் உள்ளவன் என்பதையும் அறிவிக்கின்ற பெருமை இச் சிவ சின்னங்களுக்குரியன.

### திருவைந்தெழுத்து

திருநீறு, உருத்திராக்கம், வில்வம், இலிங்கம், பஞ்சாக்ஷரம் என்ற ஐந்தும் சிவ சின்னங்களாகும். வெளியே தவத்தையும் உள்ளே ஜெபத்தையும் தவத்தோர்களுக்குச் சாத்திரங்கள் வற்புறுத்துகின்றன. ஜெபம் இல்லாத தவம் அரசன் இல்லாத அரண்மனை போன்றதே. அவ்வாறு செய்யப்படும் ஜெபங்களுக்கு மந்திரங்கள் அவசியமானவையாகும். 'மந்திரமூலம்' என்று திருவைந்தெழுத்தை அழைப்பர். "பொலிந்த திருவஞ் செழுந்தென்னும் பரந்த புகழ் மந்திரவேந்து" என்று ஸ்ரீ சிவப்பிரகாசர் ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் பிள்ளைத்தமிழில் கூறுகிறார். சிறப்புற்ற வேதங்களாகிய அதர்வண வேதம் ஒழிந்த மூன்று வேதங்களில்

தலைசிறந்ததும் இடையில் உள்ளதுமாகிய யஜுர் வேதத்தில் உள்ள எழுகாண்டங்களில் மத்திய காண்டமாகிய நான்காங் காண்டத்தில் மத்தியில் உள்ளதாகிய ஸ்ரீ ருத்திரத்தின் மத்தியில் பஞ்சாக்ஷரம் சொல்லப்பட்டது. அப்பஞ்சாக்ஷரத்தின் இடையில் உள்ளவை 'சிவ' என்னும் இரண்டெழுத்துக்கள். வேதத்தில் பஞ்சாக்ஷரம் அமைக்கப்பட்டிருக்கும் முறை ஒன்றே அதன் சிறப்பை விளக்கும். பஞ்சாக்ஷர ஜெபம் பல துன்பங்களையும் போக்கி இன்பம் அளிக்க வல்லது. இறுதியில் பேரின்ப வாழ்வையும் தர வல்லது. சைவப் பெருமக்கள் அனைவரும் சிவபூசையும், பஞ்சாக்ஷர ஜெபமும் செய்துவருதல் அவர்களுக்கும் உலகிற்கும் நன்மை பயப்பதாகும்.

**தோத்திரமும் சாத்திரமும்**

சிவ சின்னங்களை அணிதலும், பயன்படுத்தலும், சிவனடியாரை வழிபடுதலும், சிவபூசை செய்தலும், சிவபெருமானை உள்ளக்கிழியில் உருவெழுதித் தியானித்தலும், சிவப்பணியில் ஈடுபடுதலும் ஆகிய பலவற்றுள் எந்த ஒன்றை உறுதியாகப் பற்றினும், அந்த ஒன்றே வீடுபேறளிக்க வல்லதாகும் என்பது சைவ சமயம் கண்ட முடிபு.

அவ்வாறு நின்று இறைநெறியிற் படிவார்க்குப் பன்னிரு திருமுறை என்ற பகுப்பில் சேரும் தோத்திர நூல்களும், பிற பல சைவப் பெரியார்களின் அருள் உரைகளும், உண்மைப் பொருள் ஆராய்ச்சி செய்வார்க்குச் சாத்திர நூல்கள் பதினான்கும், பிற துணைநூல்களும் நம் தமிழ்மொழியில் நிறைந்திருக்கின்றன.

" வெண்ணெய்க் கட்டியும் சீனியும் தின்னலாம்
விக்கிக் கொள்வதற் கென்செய்யலாம் "

என்கிறபடியே, நூல்கள் பல இருப்பினும் அவற்றைப் போற்றிப் பயனை அனுபவித்தல் நமது கடமையாகும். போற்றிக் கொள்ளாமை நமது உயிரைப் போற்றாமையே யாகும்.

**சைவ சித்தாந்த மகா சமாஜம்**

தொன்மையும், பெருமையும், திண்மையும், நன்மையும் உடைய நமது சைவ சமயம் தளர்ந்த போதெல்லாம்

தோன்றி திருத்திய சமயாசிரியர்களைப் போலவே நம் தவப்பயன் எனத் தோன்றிய தவத்திரு ஞானியார் அடிகள், திரு. மறைமலையடிகள் முதலிய பெரியோர்களது நன்முயற்சியால் ஐம்பத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் சைவ சித்தாந்த மகா சமாஜம் என்னும் இவ்வமைப்பு நாம் எல்லாம் செய்த புண்ணியத்தின் பயன் எனத் தோன்றியது. சமாஜ அமைப்பாளர் அனைவரும் ஒன்றுபட்டுத் தமிழ்ப் பெருநூல்கள், சமயத் திருமுறைகள், சமய சாத்திர நூல்கள் பலவற்றை அழகுற்ற முறையில் அச்சிட்டு அடக்கவிலையில் தமிழுலகிற்கும் சைவ உலகிற்கும் ஈந்தனர். " சித்தாந்தம் " என்னும் மாத இதழைத்தொடங்கித் தொடர்ந்து நடத்தி, அதன்மூலம் அரிய பல கருத்துக்களைப் பல பெரியார்களைக் கொண்டு நமக்குத் தருகின்றனர். அதனோடு மட்டுமன்றி ஆண்டுக்கொருமுறை ஒவ்வோரிடத்தில் மாநாடுகள் கூட்டிச் சைவப் பெரும் பணியில் ஈடுபட மக்களைச் செயற்படுத்தி வருகிறார்கள். சைவ மெய்யன்பர்களாய பெரியோர்களுக்குமட்டுமன்றி, சைவ இளைஞர்கள் வருங்காலச் சைவ உலகை வளர்விக்க வல்லவர்கள் என்று கொண்டு அவர்களுக்கும், வருங்காலச் சைவ இளைஞர்களும் பெரியோர்களுமாகிய தற்காலக் குழந்தையுலகத்திற்குச் சைவப்பாலை ஊட்டி வளர்ப்போர் மங்கையரே என்றுணர்ந்து அவர்களுக்கும், தனி மாநாடு நடாத்திச் சிறப்பித்து வருகிறார்கள். இத்தகைய நமது சமாஜம் ஒளிச் செய்ய இருக்கும் தொண்டுகளும் பல.

ஒவ்வொரு சிற்றூரிலும் சைவசமயப் பிரச்சாரம் செய்யப்படவேண்டும். சிற்றூர் வாழ் மக்கள் சமய உண்மைகளை அறிந்துகொள்ளச் சிறுவெளியீடுகள் வெளியிடப்பட வேண்டும். சைவ மக்கள் இறைவழிபாட்டை மறவாது செய்தற்குரிய ஏற்பாடுகளை மேலும் விரிவுபடுத்தவேண்டும். பள்ளி மாணவர்களுக்குச் சமயக் கல்வியை நன்கு அளிக்க ஏற்பாடுகள் செய்யவேண்டும். இத்தகைய முயற்சிகளில் எல்லாம் நமது சமாஜம் மேலும் மேலும் சிறந்தோங்கித் தமிழுலகிற்கும் சைவ உலகிற்கும் தக்கதோர் அணியாய்த் திகழ்வதாகுக.

**ஆசியுரை**

இம்மூன்று நாள் மாநாடுகளிலும் தலைமையேற்றுச் சிறப்புற நடத்திக் கொடுத்த தலைவர்களுக்கும், பல்வேறு

வகையில் பங்குகொண்டு பேருரையாற்றிய சொற்பொழி வாளர்களுக்கும், இன்னிசைப்பண்களை இன்புறப் பாடிய தேவாரக்குழுவினருக்கும், சமாஜ அமைப்பாளர்களுக்கும், பல்வேறு வகையிலும் தொண்டாற்றிய தலைவர், ஆசிரியர், மாணவர், பொதுமக்களுக்கும், ஆர்வத்தோடு இருந்து கேட்டுச் சைவ நலத்தை உள்ளத்தே வளர்த்துத் தங்கள் இல்லத்தும் வளர்க்கவுள்ள பெருமக்கட்கும், இன்னும் இதிற் பங்குபற்றிய பல்வேறு வகையினருக்கும், திருவும் கல்வியும் சீரும் தழைக்கவும், எல்லா விதமான நலங்களும் பெருகவும், ஈறில் இன்பம் நிறையவும் ஸ்ரீ இட்டலிங்கப் பெருமான் திருவருளையும், ஆதி சிவஞான பாலய சுவாமிகள் திருவருளையும், பொன்னம் பலத்தெம் புண்ணியன் தன் திருவடிகளையும், திருமுருகப் பெருமான் இரு கழல்களையும் இறைஞ்சுகின்றேம்.

வாழ்க உலகெலாம்!

---

# சித்தாந்த வகுப்புக்கள்

(முருகவேள்)

"சைவ சித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கை யானது மிக விரிந்ததும், பெருஞ் செல்வாக்குடையதும், ஐயத்திற்கு இடனின்றி உண்மையிலேயே பெருமதிப்பிற்குரி யதும், இந்திய நாட்டிலுள்ள சமயக் கொள்கைகளு ளெல்லாம் தலைசிறந்தது மாகும். தென்னிந்திய மக்களின் மிகச்சிறந்த பேறிவின் பெருவிளைவே சைவ சித்தாந்தமாகும். இறை, உயிர், மக்கட்டன்மை, உலகியற்கை, அறியாமை, துன்பம், காணப்படாத மறுமை நிலைகள் என்பனவற்றைக் குறித்த சிக்கலான பொருள்களைத் தெளிந்து கொள்ளும் இத்தகைய சிறந்த முயற்சி பற்றி இதுகாறும் ஆங்கிலத்தில் முற்றிலும் எடுத்து விளக்கப்படவே இல்லை."*

சித்தாந்தச் சிறப்பு

---

*Rev. G. U. Pope, M.A., D.D.

"பிற எல்லா ஆராய்ச்சி வகைகளையும், கொள்கை அல்லது வழிபாட்டு முறைகளையும்விட மேலானதாகச் சைவ சித்தாந்தமானது சில சிறப்பியற் பண்புகளைத் தன்பாற் கொண்டொளிர்கின்றது. மிகவும் பழமை வாய்ந்ததாய், அப் பழமையினுலாய பெருமைகளைப் பெற்றுப் பிறங்குகின்றது. சமய உலகில், தென்னிந்தியாவில் உள்ள மிகப் பெரும் பான்மையான சிறந்த கருத்துக்களுக்கெல்லாம், சைவசமயமே நேரிதின் உரிமைத் தொடர்புடையதாகும். தமிழ் மக்களின் சமயமாகிய அதனை நோக்க, அடுத்துள்ள ஏனையன பிற எல்லாம் ஒப்பியல் முறைமையில் அயலவர்க்கு உரியனவும், அண்மையிற் றேன்றியனவுமேயாகும். சமய ஆராய்ச்சித் துறையிலும், கொள்கை வாழ்க்கை என்பனவற்றின் வெளிப்பாட்டு முறையிலும், மிகமிகச் சிறந்ததொன்ருகத் தென்னிந்தியா பெற்றிருப்பது சைவ சித்தாந்தமேயாகும்."*

"மெய்ப் பொருள்நூற் றுறையிலும் இயற்கைப் பொருள்நூற் றுறையிலும் அண்மையில் வளர்ச்சி பெற்றுள்ள மேலைநாட்டு முடிபுகள் யாவும், வேறு பிற எந்தப் புதிய அல்லது பழைய சமயத்துக்கோ மெய்ப்பொருள் நூல் களுக்கோ உரிய கருத்துக்களை அல்லாமல், சைவ சித்தாந்தம் ஒன்றற்கேயுரிய அடிப்படைக் கொள்கைகள் எல்லாவற்றின் உண்மையையும் உயர்வையும் மெய்ப்பித்து நிறுவுதற்குப் பல வகையினும் ஒத்துநின்று துணையாக அரண் செய்கின்றன."†

என்றிங்ஙனம் பலராலும் வியந்து புகழ்ந்தோதப் பெறும் சைவ சித்தாந்தம் என்னும் அரிய பெரிய தத்துவக் கொள்கையானது, தமிழ் மக்களாகிய நம்மனோர்க்கு உரியதாக இருந்தும்,

"பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
ஓரூர் உண்மையின் இகந்தனர் போல"

நாம் அதன் அருமை பெருமைகளை அறிந்து பாராட்டிப் பயன் கொள்ளுங் கருத்தின்றி வறிதே கிடந்துழன்று வருகின்றோம்.

---

* Rev. Mr. W. Goudie.

†சிவத்திரு. மறைமலையடிகள்.

சிலரும் இலரே !

" ஒரும் வேதாந்தம்என் றுச்சியிற் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்தேன்
சாரங் கொண்ட சைவ
சித்தாந்தத் தேனமிழ்து அருந்தினர் சிலரே"

எனக் குமாரகுருபர அடிகள் சைவ சித்தாந்தத்தின் தனிப் பெருந்தகவினைப் புகழ்ந்துரைத்தனர். அவர்கள் வாழ்ந்த காலத்தில் சித்தாந்தத் தேனமிழ்து அருந்தினோர் சிலரே யாதல் இருந்தனர்போலும்! ஆனால் இன்றோ "சித்தாந்தத் தேனமிழ்து அருந்தினர் சிலரும் இலரே" என இரங்கத் தக்க நிலையில் நாம் இருந்து வருகின்றோம்!

இத்தகைய இழிதகவான நிலையை மாற்றுதற்கு நல்லவர்கள் எல்லோரும் முயற்சி செய்தல்வேண்டும். "கடன் என்ப நல்லவை எல்லாம்" எனத் திருவள்ளுவர் பணித்தனர் அன்றோ? ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர், ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர், ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள், சிவத்திரு. மறைமலையடிகள் போன்ற சான்றோர் பெருமக்களின் அடிச்சுவட்டினைப் பின்பற்றிச் சித்தாந்தச் செந்நெறியின் தெய்வ ஒளியினை என்றும் மங்காமல் சுடர்விட்டு ஒளிபரப்பித் திகழச் செய்வது தமிழ்ச் சைவ நன்மக்கள் அனைவர்க்கும் தலையாய பெருங்கடமையாகும். சமய நெறி யுணர்வுடைய தக்கவர்கள் தத்தம் கடமைகளை நன்கினிது திறம்படச் செய்யாமையினாலேயே, சமயநெறி யுணர்வுக்குப் புறம்பான சூழல்கள் தமிழகத்தில் தலைதூக்கி வருகின்றன. மணிமொழிப் பெருமான் பாடுவதுபோல, "ஆத்தமானார் அயலவர்கூடி நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்! ஆறுகோடி மாயாசத்திகள் வேறு வேறு தம் மாயைகள் தொடங்கின!" இந்நிலையைக் குறித் தெண்ணுங்கால், Hugh Latimer என்பார் செய்த சமய விரிவுரை ஒன்றின் நினைவு வருகின்றது. "இங்கிலாந்து நாடு முழுமைக்கும் மிகமிகச் சுறுசுறுப்புடைய சமயப்பணியாளர் ஒருவர்தான் இருக்கின்றார். அவர் யார் என்று உங்களுக்குத் தெரியுமா? தெரியாவிட்டால், நான் கூறுகின்றேன். அதுதான் சாத்தான் என்பது. சமயப் பணிபுரியும் பொறுப்புடைய நம்

கடமை யுணர்வு

எல்லோருள்ளும், சாத்தான் ஒருவரே தன் கடமையிற் சிறிதும் தவறுமற் கருத்தாகவும் முழுஆற்றலுடனும் பணி புரிந்து வருகின்றார் ! சமய குருமார்களே ! இஃது உங்கட்கு அவமானமாக இல்லையா ? சாத்தானிடமிருந்தாவது நீங்கள் உங்கள் அலுவல்களிற் சுறுசுறுப்பாக இருப்பதற்குக் கற்றுக் கொள்ளுங்கள் ! அந்தோ ! கடவுளிடமிருந்து கற்றுக் கொள்ளுதற்குரிய நீங்கள், சாத்தானிடமிருந்தாவது கடமைகளைக் கருத்தாகச் சுறுசுறுப்புடன் நிறைவேற்றுந் திறனைத் தெரிந்து கொள்ள முற்படுங்கள் !'' என Hugh Latimer செய்த சொற்பொழிவு நமது நிலைக்கும் பொருந்துவதாக உளதன்றோ ?*

சைவ சித்தாந்தத்தைப் பரப்புதற்குரிய பலப்பல வழிகளை அறிஞர்கள் குறிப்பிடுவ துண்டு. ஆனல் அவை எல்லா வற்றுள்ளும் மிகமிக முதன்மையானதும், விரைவில் எளிதாகச் செய்தற்குரியதும், ஆங்காங்குச் சைவ சித்தாந்த நூற்பொருள்களை முறைப்பட விளக்கும் வகுப்புக்கள் நிகழ ஏற்பாடு செய்தலேயாகும். வேறு பிற எந்த முறைகளையும் விட, நேர்முகமாக ஓர் ஆசிரியர்பாற் பாடங் கேட்டுக் கொள்ளுதலே உயர்ந்த நூற்பொருள்களை உணர்ந்து தெளிந்து கொள்ளுதற்குரிய சிறந்த வழியாகும். நேர்முகமாக ஓர் ஆசிரியர்பாற் பாடங் கேட்டுத் தெளிந்து கொள்ளுதலின் இன்றியமையாமைச் சிறப்பினையே,

பாடங் கேட்டலின் பயன்

"இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல் ''

"சாத்திரத்தை ஓதினர்க்குச் சற்குருவின் றன்வசன
மாத்திரத்தே வாய்க்குமநலம் வந்துறுமோ? —ஆர்த்தகடல்
தண்ணீர் குடித்தவர்க்குத் தாகம் தணிந்திடுமோ ?
தெண்ணீர்மை யாய்இதனைச் செப்பு !''

எனவரும் திருமொழிகள் வலியுறுத்துதல் காண்க. "என்னை ஓர் வார்த்தையுட் படுத்துப் பற்றினுய்'' எனவரும் திருவாசகமும் ஈண்டு எண்ணி யுணரற்பாலது.

---

*A. C. Rickett, The Bible and the English Divines, 167

எனவே, தமிழகத்தின் ஞானப்பெரு நன்னிதிக் கருவூலமாக விளங்கும் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் மக்களிடையே பரவி நலம் பயக்கும் வண்ணம், தமிழ்ச் சைவச் செல்வர்கள் ஆங்காங்குள்ள திருக்கோயில்கள் திருமடங்களின் சார்பிலோ தமிழ்க் கழகங்களின் சார்பிலோ, சைவ சித்தாந்த வகுப்புக்கள் நிகழ ஏற்பாடுகள் செய்தலை ஒரு பெருஞ் சிவபுண்ணியச் செயலாகக் கருதிச் சித்தாந்தச் செந்நெறிக்குப் பணிபுரிந்து பயன்கொள்ள வேண்டுகின்றோம்.

செல்வர்கள்

தமிழறிஞர்கள் தாந்தாம் இருக்கும் பகுதிகளில் இத்தகைய வகுப்புக்களைத் தாமே முன்னின்று ஏற்பாடு செய்து, சித்தாந்தச் சமயநூல்களைப் பலருக்கும் பாடங் கூறலாம். திருக்குறள் சிலப்பதிகாரம்போன்ற நூல்களை வகுப்பு முறையிற் பாடமாக ஆங்காங்குத் தமிழறிஞர்கள் நடாத்திப் பணிபுரிகின்றனர். அங்ஙனமே சித்தாந்த நூல்களையும் கற்பித்து உதவத் தமிழறிஞர்கள் முற்படுதல் வேண்டும். தொன்னூற்கு அஞ்சித் தடுமாறும் உள்ளம் கொள்ளுதல் வேண்டா! இலக்கிய இலக்கண அறிவும், திருமுறைகளில் ஈடுபாடுடைய பயிற்சியும் நன்கினிது வாய்க்கப் பெற்று அன்பும் ஆர்வமும் மிக்க தமிழறிஞர்கள் முயன்றால், சித்தாந்த நூல்களைக் கற்கவும் கற்பிக்கவும் இயலும் என்பதில் ஐயமில்லை.

அறிஞர்கள்

" பெற்றான் ஒருவன் பெருங்குதிரை அந்நிலையே
கற்றான் அஃதூரு மாறு "

என்றபடி, முயற்சியில் தலைப்பட்டால் திறமை தானாகவே நாளடைவில் ஏற்பட்டுவிடுதல் திண்ணம். தமக்கும் பிறர்க்கும் ஒருங்கே பயன் விளைக்கும் இத்தகு செயல்களில் தமிழ்ப் புலவர்கள் ஈடுபட்டுச் சிறப்பெய்துவார்களாக!

தமிழ்ப் பற்றுடைய இளைஞர்களும், தமிழ்க் கல்லூரிகளிற் பயிலும் மாணவர்களும், தாம் சைவ சித்தாந்த நூல்களைக் கற்றுணர்ந்து கொண்டாலன்றித் தம் புலமை நிரம்பியதாகாதென உணர்ந்து, அவற்றைக் கற்றுணரும் முயற்சியை

இப்போதிருந்தே தொடங்குதல் வேண்டும். ஆசிரியர் மறைமலை அடிகள் தாம் இயற்றிய 'திருவொற்றி முருகர் மும்மணிக் கோவை'யின் முன்னுரையில்,

இளைஞர்கள்

"எமது பதினைந்தாம் ஆண்டில் முறைப்படி துவங்கிய தமிழ்ப் பயிற்சியானது 21-ஆம் ஆண்டிற் பெரும்பாலும் நிரம்பியதென்னலாம். 21-ஆம் ஆண்டிற்குள் தொல்காப்பியம் திருக்குறள் திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் மூன்று நூல்களையும் முழுதும் நெட்டுருச் செய்து முடித்தேம்......சிவஞானபோதம் சிவஞானசித்தியார் என்னும் நூல்கள் இரண்டும் முழுமையும் நெட்டுருச்செய்து முடிக்கப்பட்டன..."

என எழுதியிருப்பது, இஞ்ஞான்றைத் தமிழிளைஞர்கள் உணர்ந்து பின்பற்றி ஒழுகி உயர்வெய்துதற்குரிய செய்தியாகும். புலவர் வகுப்புக்களிற் பயிலும் மாணவர்கள் தேர்விற்குரிய பாடங்களோடு மட்டுமே அமைந்துவிடாமல், சித்தாந்த சாத்திரங்கள்போன்ற பலவகை நூல்களையும் இடையிடையே பயின்று வருதல் பெருநலம் பயக்கும்.

வேண்டுகோள்

இதுகாறும் கூறிவந்த இவ்வாற்றால், நமது சமாஜத் தலைவர் இராவ்சாகிப் திரு. நல். முருகேச முதலியார் பி.ஏ., அவர்கள், மயிலம் மாநாட்டின்கண் நிகழ்த்திய தமது முன்னுரையிற் குறிப்பிட்டுள்ளபடி, "சைவப் பெருமக்கள் அனைவரும் திருமுறைகளையும் சித்தாந்த சாத்திரங்களையும் ஓதுதலும் ஓதுவித்தலும் கடமையாகக் கொள்ளுதல் வேண்டும்" எனவும், "சித்தாந்த நூல்களை முறையே கற்பிக்கும் வகுப்புக்களைப் பலவிடங்களில் நடத்துவதற்குத் தக்க ஆசிரியர்கள் முன்வருதல்வேண்டும்" எனவும் வற்புறுத்தி வேண்டிக் கொள்ளுகின்றோம். சென்னையில் தொண்டை மண்டலம் உயர்நிலைப் பள்ளியிற் சிவநெறிச் செஞ்சொற் கொண்டல் ஆசிரியர்-திரு. இளவழகனார் அவர்களும், தியாக

ராயநகர்த் தருமபுர ஆதீனப் பிரசார நிலையத்தில் சித்தாந்த சிகாமணி திரு. க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ.,எல்.டி. அவர்களும் சித்தாந்த நூல்களை வகுப்பு முறையில் ஞாயிறு தோறும் சிறப்புறக் கற்பித்து வருகின்றார்கள். இங்ஙனமே, தமிழகத்தின் பல பகுதிகளிலும் திருக்கோயில்கள் திருமடங்கள் தமிழ்க்கழகங்கள் சைவ சபைகள் ஆகியவற்றின் சார்பில் தக்க அறிஞர்களின் துணைகொண்டு, சித்தாந்த வகுப்புக்கள் நடைபெறச்செய்து பயன் கொள்ளுமாறு அன்பர்கள் அனைவரையும் வேண்டுகின்றோம்.

"Restricting the body of knowledge to a small group deadens the philosophical spirit of a people and leads to spiritual poverty."

—*Dr. Albert Einstein*

---

# நல்லோர் நடுவில்

திரு. கே. இராமநாதன், பி.ஏ., பி.எல்.

அறிவைப்பெறப் பல வழிகள்; உணர்வைப் பெற வழிகள் குறைவு. அறிவை வளர்ப்பது எளிது; உணர்ச்சியை வளர்ப்பது அருமை. மடையர்களுக்கு நடுவேயிருந்து நூல்களைக் கற்று அறிவாளியாக முடியும். அயோக்கியர்களுக்கு நடுவேயிருந்து யோக்கிதையுடன் இருப்பது துர்லபம். இதற்கு உதாரணங் காட்டத்தேவையில்லை. கெட்டவர் சேர்க்கையால் ஒழுக்கம் அறவே கெடும்; பண்பாடு விரைவில் குறையும்; தெய்வ நம்பிக்கை மிகத் தளரும்.

உலகத்தில் நற்பண்புகள் வளரத் தடைகள் ஓயாது வந்துகொண்டிருக்கின்றன. ஏழை எள்ளப்படுகிறான். பல பிள்ளைகள் பெற்று வளர்த்து வருங் கற்பரசியைச் சமுதாயம் மதிப்பதில்லை. காசும் பூச்சும் உல்லாசமும் ஒய்யாரமும் உள்ளவள் பல குறைபாடுடன் முன் அணியின் நிற்கிறாள். போற்றுவோரும் பின்திரிவோரும் எண்ணற்றவர். எப்படிச் சம்பாதித்தாலும் பணக்காரனுக்கும் பதவியிலுள்ளவனுக்குமே மதிப்புக் கொடுக்கப்படுகிறது. ஆடம்பரப் போலிச்சாமிகளை வணங்குவோர் பலர். சமயவாதிகள்

பணக்காரரைப் புகழ்வார். இந்தச் சூழ்நிலையில் இருப்பவன் எப்படி நல்லவனாக இருக்க முடியும்.

நாம் நமக்குள்ளே கெட்டவர்களை மனத்தால் தூரத்தில் வைப்பது மிகக் கஷ்டம். உலகத்தை விட்டு ஓடிப் போகுதலும் கஷ்டம். ஆகையால் நல்லார் நடுவிலே இருக்க முயலவேண்டும்.

அவர்களே நமக்குக் கவசம்; எளிதில் நமக்கு நல் லுணர்ச்சி தரக்கூடியவர்கள்; நம்மைக் காப்பாற்றக் கூடியவர்கள்.

" உடையாள் உன்றன் நடுவிருக்கும் உடையாள்
நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால்
அடியே னுன்
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்
புரியாய் பொன்னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து முடியும்
வண்ணம் முன்னின்றே.

---

## நன்றி

கீழ்க்காணும் மலேயா சந்தாநேயர்களிடமிருந்து 1959-ம் ஆண்டுச் சந்தாத் தொகைகளை வசூலித்து அனுப்பியமைக் திரு. சிவநேயன் அவர்களுக்குச் சமாஜத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

1. ந. சிவநேயன் (4006), 163, பெரியதெரு, கோலாலம்பூர். 2. சி.சுப்பையா (3879). 3. கோ. குழந்தைவேல் (3881). 4. ந. பொன்னையா (4013). 5. நா. கார்த்திகேசு (4010). 6. எ. மாணிக்கம் (4005). 7. நா. ரெ. கருப்பையா (4012). 8. மனோன்மணி விலாசம் புத்தக நிலையம் (4315). 9. த. குணரெத்தினம் (3998). 10. மா. விஸ்வநாதன் (4316).

**ஓர் விண்ணப்பம்:**—மலேயா அங்கத்தினர்கள் பலர் இவ்வாண்டில் இன்னும் தமது சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவில்லை. அருள்கூர்ந்து அன்பர்கள் அனைவரும் தங்களுடைய சந்தாக்களை, திரு. சிவநேயன் அவர்களிடம் செலுத்தி ரசீது பெற்றுக்கொள்ளுமாறு வேண்டிக் கொள்ளுகிறேன்.—செயலாளர்

களில் இருந்தெடுத்து விளக்கினர். திரு. அ. ச. ஞான சம்பந்தனர், M.A. அவர்கள் "நாடகத் தமிழ்" குறித்து அரியதோர் ஆய்வுரை நிகழ்த்தினர். மகாவித்துவான் திரு. மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள் புலவர் வாழ்த்தும், சென்னைச் சட்டமன்ற எதிர்க் கட்சித் தலைவர் திரு. வீ. கே. இராமசாமி முதலியார் அவர்கள் புரவலர் வாழ்த்தும்; பாரி நிலையம் திரு. க. அ. செல்லப்பர் அவர்கள் ஷ அச்சகத் தொழிலாளர்கட்கு ஊதியப் பரிசளிப்பும் வழங்கினர். முத்தமிழ் அச்சக உரிமையாளர் திரு. சி. காளப்பர் நன்றியுரை நவின்றார்.

**கச்சித் தமிழ்க் கழகம் 13 ஆம் ஆண்டுவிழா :** 25-1-59 அன்று மாலை முத்தமிழ் அச்சகத்தின் புதிய நிலையத்தில் முனைவர் திரு. மு. வரதராசனர், M.A., M.O.L., Ph. D. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. இறைவணக்கத்திற்குப் பின் கழக ஆசிரியர் சித்தாந்தக் கலைமணி திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள் வரவேற்புரை கூறினர். மகாவித்துவான் திரு. மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள் திருவள்ளுவர் திருவுருவப் படத்தினைத் திறந்து வைத்துச் சிறந்ததொரு விரிவுரை செய்தார். "வள்ளுவர் வாய்மொழி" என்பது குறித்துச் சித்தாந்த சிகாமணி திரு. க. வச்சிரவேலு முதலியார், B.A., L.T., அவர்கள் அரியதொரு சொற்பொழிவாற்றினர். கழகச் செயலாளர் திரு. சி. காளப்பர் அவர்கள் நன்றியுரை கூற விழா இனிது நிறைவெய்தியது.

**வார வழிபாடு :** பல்லாவரத்தில் மறைமலையடிகளாரின் பொதுநிலைக் கழகச் சார்பில், 24-1-59 அன்று ஆசிரியர் திரு. இளவழகனரவர்கள் வார வழிபாட்டினைத் தொடங்கி வைத்தார்கள். சென்னை நகராண்மைக் கழகத் துணை ஆணையாளர் திரு. N. சங்கரன், M.A., L.T., அவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்கினர்கள். சென்னையில் இருந்து அன்பர்கள் பலர் வந்து கலந்துகொண்டு சிறப்பித்தார்கள்.

---

## சான்றோர் திருநட்சத்திரங்கள்

### நாயன்மார்

விளம்பி ஆண்டு மாசிமீ

13உ (25-2-59) புதன்கிழமை—எறிபத்தநாயனர்—அஸ்தம்
20உ (4-3-59) புதன்கிழமை—காரி நாயனர் —பூராடம்
24உ (8-3-59) ஞாயிறு—கோச்செங்கட்சோழர்—சதயம்

### சைவப்பெரியார்

5உ (17-2-59) செவ்வாய்க்கிழமை—கச்சியப்ப சிவாசாரியார்—மிருகசீரிஷம்

---



---

Printed at the Sadhu Press, 15. Ganapathi Mudali Street, Royapettah by D. Mangayarkarasi and V.K. Punithavathi, Edited by Pulavar Murugavel, M.O.L., & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.